# اعتقاد أئمّة الحديث

للإمام أبي بكر الإسماعيلي رحمه الله

# ஹதீஸ் கலை இமாம்களின் கொள்கை

| இஃத்திகாது அயிம்மத்தில் ஹதீஸ் |

ஆசிரியர் :

அபூ பக்ர் அல்இஸ்மாயீல்

பிறப்பு : ஹிஜ்ரி 277, இறப்பு : 370

தமிழில்:

உமர் ஷரீஃப் அப்துஸ் ஸலாம்

குர்ஆன், சுன்னா பணியாளர்

DARUL HUDA

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

# اِعْتِقَادُ أَئِمَّةِ الْحَدِيْثِ

للإمام أبي بكر الإسماعيلي رحمه الله

# ஹதீஸ் கலை இமாம்களின் கொள்கை

| இஃத்திகாது அயிம்மத்தில் ஹதீஸ் |


ஆசிரியர் :

**அபூ பக்ர் அல்இஸ்மாயீலி**

பிறப்பு : ஹிஜ்ரி 277, இறப்பு : 370

தமிழில்:

**உமர் ஷரீஃப் அப்துஸ் ஸலாம்**

குர்ஆன், சுன்னா பணியாளர்



إن هدى الله هو الهدى
دار الهدى
DARUL HUDA
(இஸ்லாமாகிய) அல்லாஹ்வின் நேர்வழியே உண்மையான நேர்வழி

## About This Book


| | | |
|---|---|---|
| Name of the Book | : | **ஹதீஸ் கலை இமாம்களின் கொள்கை** |
| Name in English | : | The belief of the imams of the hadith |
| Name in Arabic | : | اِعْتِقَادُ أَئِمَّةِ الْحَدِيْثِ |
| Author | : | Abu Bakr Al Ismaeeli |
| Translator | : | **OMAR SHERIFF ABDUS SALAM** |
| Language | : | Tamil |
| Date of Publication | : | June 2020 |
| Edition | : | 1st, June 2020. |
| Total Pages | : | 80 |
| Copies | : | 2000 |
| Ref. No. | : | DH-TML 2064 |
| Printed by | : | Patel Graphics, Chennai - 6. |

**HADIYAH: RS. 60/-**

Published by:

DARUL HUDA

QUALITY ISLAMIC BOOK PUBLISHERS

# 211 (102), 1st Floor, Linghi Street, Mannady, Chennai-600001.

Phone : +91-44-25247866, | darulhuda.chennai@gmail.com

Mobile : +91-98401 74121 | www.darulhuda.net

# உள்ளே...

# பதிப்புரை

பேரருளாளன் பேரன்பாளான் அல்லாஹ்வின் பெயரால்

எல்லாப் புகழும் அல்லாஹ்விற்கே! ஸலவாத்தும் ஸலாமும் அல்லாஹ்வுடைய தூதர் மீதும் அவர்களின் குடும்பத்தார் மற்றும் தோழர்கள் மீதும் நிலவட்டும்.

இமாம் அபூ பக்ர் அல்இஸ்மாயீலி அவர்களின் இந்த நூலை வெளியிட அருள் புரிந்த அல்லாஹ்வை புகழ்ந்து அவனுக்கு நன்றி செலுத்துகின்றோம்.

கொள்கை விஷயத்தில் அஹ்லுஸ் ஸுன்னா என்ற பெயரில் பல வழிகேடுகள் இன்று சமுதாயத்தில் ஆழமாக வேரூன்றி இருக்கிறது.

உண்மையான அஹ்லுஸ் ஸுன்னா அந்நியர்களாக பார்க்கப்படுகிறார்கள். அவர்கள் ஏதோ இப்னு தைமிய்யாவின் கொள்கையை மக்களுக்கு மத்தியில் பரப்பக்கூடியவர்கள் போன்று பிரச்சாரம் செய்யப்படுகின்றது.

ஸலஃப் மன்ஹஜை பின்பற்றுகின்ற ஆலிம்கள் கூறுகின்ற இந்த கருத்தெல்லாம் இதற்கு முன்னர் அஹ்லுஸ் ஸுன்னாவின் ஆலிம்கள் யாரும் கூறியதில்லை என்று பலர் பேசுகின்றனர்.

இவர்களின் இந்த பொய் பிரச்சாரத்தை முறியடிப்பதற்காகவும் உண்மையான அஹ்லுஸ் ஸுன்னா யார், அவர்களில் முன் சென்ற மூத்த இமாம்கள் எந்த கொள்கையில் இருந்தார்கள் என்பதை மக்களுக்கு தெளிவுபடுத்துவதற்காகத்தான் அறிஞரின் இந்த சிறு நூலை வெளியிடுகின்றோம்.

நாம் சொல்கின்ற அகீதாக்கள் இப்னு தைமிய்யாவின் சிந்தனையில்

உதித்தவை அல்ல. மாறாக இவைதான் நபி ﷺ அவர்கள், அவர்களின் தோழர்கள், மற்றும் தாபியீன், தபவுத் தாபியீன் உடைய கொள்கைகளாக இருந்தன.

இந்த கொள்கைகள்தான் ஹதீஸ் கலை அறிஞர்கள் மற்றும் நான்கு இமாம்களின் கொள்கைகளாக இருந்தன. இன்னும் நேர்வழி நடந்த சான்றோர் இவற்றைத்தான் தங்கள் கொள்கைகளாக ஏற்று வாழ்ந்தார்கள். அவற்றையே மக்களுக்கு போதித்தார்கள்.

அப்படிப்பட்டவர்களில் மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த அறிஞர்களில் ஒருவர்தான் இந்நூலின் ஆசிரியர் ஆவார்.

இமாம் இப்னு ரஜப் ஹன்பலி, இப்னு ஹஜர் அஸ்கலானி, பத்ருத்தீன் அல்ஐனி போன்ற ஸஹீஹ் புகாரியின் விரிவுரையாளர்கள் புகாரியின் விரிவுரையில் பல்லாயிரம் முறை அபூ பக்ர் இஸ்மாயீலி அவர்களின் விளக்கத்தை எடுத்துக் கூறுவதை நாம் பார்க்க முடிகிறது. அந்த அளவு கல்வி ஆழமுள்ளவர் ஆவார் இந்நூலின் ஆசிரியர்.

இன் ஷா அல்லாஹ் இன்னும் பல மூத்த அறிஞர்களின் கொள்கை சார்ந்த சிறு நூல்கள் தொடர்ந்து வெளிவர இருக்கின்றன. அவற்றை அழகிய முறையில் நாங்கள் வெளியிட, அவற்றின் மூலம் மக்கள் என்றென்றும் பலன் பெற அல்லாஹ் அருள் புரிவானாக! ஆமீன்.

அல்லாஹ்வே எங்களிடமிருந்து ஏற்றுக்கொள்வாயாக! எங்களை மன்னிப்பாயாக! நீதான் மகா மன்னிப்பாளன், நன்கு செவியுறுபவன், நன்கறிந்தவன்.

இந்நூலில் ஏதும் பிழைகள் இருந்தால் சுட்டிக்காட்டவும். நன்றியுடன் அடுத்த பதிப்பில் அவற்றை திருத்தி வெளியிடுவோம் இன் ஷா அல்லாஹ்.

உமர் ஷரீஃப் அப்துஸ் ஸலாம்
குர்ஆன், ஸுன்னா பணியாளன்
தாருல் ஹுதா, மண்ணடி - மதராஸ் 1.

# தாருல் ஹுதா
# அறிமுகம்

எல்லாப் புகழும் அகிலங்களின் இறைவன் அல்லாஹ் ஒருவனுக்கே! இறையருளும் ஈடேற்றமும் நபி முஹம்மது ﷺ அவர்களுக்கும், அவர்களது குடும்பத்தார், தோழர்கள், அவர்களைப் பின்பற்றும் அனைவருக்கும் உண்டாகட்டும்.

இஸ்லாமியச் சகோதர சகோதரிகளே!

அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹு

தாருல் ஹுதா அறிமுகத்தின் வாயிலாக உங்களைச் சந்திப்பதில் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறோம். இதில் தாருல் ஹுதாவின் நோக்கத்தையும் அதன் பணிகளையும் விவரிப்பதுடன் அதன் இன்றைய தேவையையும் தங்கள் முன் சமர்ப்பிக்கிறோம்.

*அல்லாஹு தஆலா கூறுகிறான்: "இறை நம்பிக்கையுடைய ஆண்களும், இறை நம்பிக்கையுடைய பெண்களும் (தங்களுக்குள்) ஒருவருக்கொருவர் உறுதுணையாக இருக்கின்றனர். அவர்கள், (ஒருவர் மற்றவரை) நன்மை செய்யும்படித் தூண்டியும், பாவம் செய்யாது தடுத்தும், தொழுகையைக் கடைப்பிடித்து, (மார்க்க வரி) ஜகாத்து கொடுத்தும் வருவார்கள். அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் கட்டுப்பட்டு நடப்பார்கள். இத்தகை யோருக்கு வெகு விரைவில் அல்லாஹ் அருள்புரிவான்..."*

*(அல்குர்ஆன் 9:71)*

*மேலும், அல்லாஹு தஆலா கூறுகிறான்: (நம்பிக்கையாளர்களே!) உங்களில் ஒரு கூட்டத்தார் மனிதர்களைச் சிறந்ததின் பக்கம் அழைத்து, நன்மையைச் செய்யும்படி ஏவி, பாவமான காரியங்களில் இருந்து அவர்களை விலக்கிக் கொண்டும் இருக்கட்டும். இத்தகையவர்கள்தாம் வெற்றியாளர்கள். (அல்குர்ஆன் 3:104)*

நபி ﷺ அவர்கள் கூறுகிறார்கள்: உங்களில் யாராவது ஒரு தவறைக் கண்டால் அதை தனது கரத்தால் மாற்றட்டும். அது இயலாவிட்டால் தனது நாவால் மாற்றட்டும். அதுவும் இயலாவிட்டால் உள்ளத்தால் (வெறுத்து விலகி விடட்டும்). இது ஈமானின் குறைந்தபட்ச அளவாகும்.

**(ஸஹீஹுல் புகாரி)**

மேலும் நபி ﷺ கூறுகிறார்கள்: இறைநம்பிக்கையாளர்கள் தங்களிடையே நேசங்கொள்வதற்கும், கருணை காட்டுவதற்கும், அன்பு செலுத்துவதற்கும் உதாரணம் ஓர் உடலைப் போல! உடலில் ஏதேனும் ஓர் உறுப்பு பாதிக்கப்பட்டால் அனைத்து உறுப்புகளும் காய்ச்சல் மற்றும் தூக்கமின்மையால் முறையிடுகின்றன. **(ஸஹீஹுல் புகாரி)**

இன்று நமது சமுதாயத்தில் சிறியோர் முதல் பெரியோர் வரை பெரும்பாலோர் சரியான மார்க்க ஞானத்திற்கும் முறையான வழிகாட்டலுக்கும் அதிகம் தேவையுள்ளவர்களாக இருப்பதைப் பார்க்கிறோம். ஆகவே, மேற்கூறப்பட்ட குர்ஆன் வசனங்கள் மற்றும் நபிமொழிகளுக்கிணங்க சமுதாய சீர்திருத்தப் பணியில் ஈடுபடுவது மார்க்கக் கடமை என்பதை உணர்ந்து, அல்குர்ஆன் மற்றும் நபிவழியின் அடிப்படையில் அந்த உயர்ந்த பணியை நிறைவேற்றி இறைப்பொருத்தத்தை அடைய வேண்டும் என்ற தூய எண்ணத்தில் தொடங்கப்பட்டதுதான் **தாருல் ஹுதா.**

## பணிகளும் தொண்டுகளும்:

### அழைத்தல்:

இதுவே இஸ்லாமின் அடிப்படையாகும். உலகில் இப்பணி இறைத் தூதர்கள் வாயிலாக நிலை நிறுத்தப்பட்டது. இறுதித் தூதர் முஹம்மது (ஸல்) அவர்களுக்குப் பின் அவர்களுடைய சமுதாயத்தினர் அனைவரின் மீதும் இப்பணி கடமையாக்கப்பட்டது. மேன்மைமிகு குர்ஆனும், சிறப்புமிகு நபி மொழியும் இதன் அவசியத்தை நமக்கு வலியுறுத்துகின்றன. இதற்கிணங்க இயன்ற அளவு அனைத்து வழிகளிலும் மனித சமுதாயத்திற்கு இஸ்லாமை அறிமுகப்படுத்துவதும், அதன் உயர்வுகளை விளங்கச் செய்வதும் தாருல் ஹுதாவின் தலையாயப் பணியாகும்.

### கற்பித்தல்:

இஸ்லாமை அறிய விரும்பும் சிறுவர்கள், வாலிபர்கள், முதியவர்கள், ஆண்கள், பெண்கள் என அனைவருக்கும் மேன்மைமிகு குர்ஆன்,

சிறப்புமிகு நபிமொழிகளை அவரவர் தகுதிக்கேற்ப கற்றுத் தருவது தாருல் ஹுதாவின் இரண்டாவது முக்கிய பணியாகும்.

**நூல் வெளியிடுதல்:**

மேன்மைமிகு குர்ஆன், சிறப்புமிகு நபிமொழி இவ்விரண்டையும் அடிப்படையாகக் கொண்டு சமுதாயப் பேரறிஞர்களால் அரபி மொழியில் எழுதப்பட்ட நூல்களை தமிழிலும் ஏனைய உலக மொழிகளிலும் மொழியாக்கம் செய்து, அந்நூற்களைச் சலுகை விலையில் மக்களுக்கு வழங்குவது தாருல் ஹுதாவின் மூன்றாவது சிறப்புப் பணியாகும்.

**உதவுதல்:**

அல்லாஹு தஆலாவே அனைவரின் தேவைகள், துன்பங்கள் அனைத்தையும் நிவர்த்தி செய்பவன். மிகப்பெரிய வள்ளலாகிய அல்லாஹ் தன் சார்பாக உலகில் ஏழை, எளியோர், நலிந்தோர் ஆகியோரின் துயர் துடைக்கும் வள்ளல் பெருமக்களுக்கு பெரும் வெகுமதிகளை ஈருலகிலும் வழங்குவதாக வாக்களித்துள்ளான். பிறர் துன்பங்களில் பங்கெடுப்பது, பிறர் தேவைகளை நிறைவேற்ற இயன்ற வரை உதவுவது முஸ்லிம்களுடைய அடிப்படைப் பண்புகளாகும். இவ்வுன்னதப் பணிக்காக **பைத்துல்மால்** (பொது நிதி) ஏற்பாடு செய்து இரக்கச் சிந்தையும், மார்க்கப்பற்றும் கொண்ட வள்ளல் பெருமக்களிடமிருந்து கடமையான, உபரியான தர்மங்களைப் பெற்று தேவையுடையோருக்கு உதவுதல் தாருல் ஹுதாவின் நான்காவது பணியாகும்.

மேற்கூறிய பணிகளைத் தவிர, இஸ்லாம் முழுமையாக ஒவ்வொருவரின் வாழ்விலும் வரவேண்டும் என்பதற்காகவும், மனிதச் சமுதாயங்களுக்குள் நல்லுறவும், அன்பும், கருணையும், சமூக புரிந்துணர்வும் ஏற்பட வேண்டும் என்பதற்காகவும் இயன்றவரை அல்லாஹ்வுக்காக தொண்டாற்ற வேண்டும் என்பது தாருல் ஹுதாவின் குறிக்கோளாகும்.

இப்பணிகள் அனைத்தும் தொய்வின்றி தொடர்ந்து சிறப்பாக, திறம்பட நடைபெறவும், அவற்றை அல்லாஹ் அங்கீகரிக்கவும் தாங்கள் துஆ செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்வதுடன் தங்களால் இயன்றவரை இப்பணிகளில் பங்கு பெறவும் அழைக்கிறோம்.

பேராற்றலுடைய அல்லாஹ்விடமே உதவி தேடுகிறோம்! அவனையே முன்னோக்கி நிற்கிறோம்!!

உங்களால் முடிந்த உதவிகளை அல்லாஹ்வின் பொருத்தம் நாடி தந்துதவுங்கள்.

> ***நன்மையான காரியங்களில் எவற்றை நீங்கள் உங்களுக்காக (மரணம் வருவதற்கு) முன்னதாகவே செய்து கொள்கிறீர்களோ அவற்றை அல்லாஹ்விடத்தில் மிகச் சிறந்ததாகவும், மகத்தான கூலியாகவும் பெற்றுக் கொள்வீர்கள். (அல்குர்ஆன் 73:20)***

அல்லாஹ் தங்களுக்கு நற்கூலி வழங்குவானாக!

---------------------

# ஆசிரியர் அறிமுகம்

பேரருளாளன் பேரன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...

பெயர் : அபூ பக்ர் அஹ்மது இப்னு இப்ராஹீம் இப்னு இஸ்மாயீல் இப்னு அல்அப்பாஸ் அல்ஜுர்ஜானி அல்இஸ்மாயீலி அஷ்ஷாஃபியி

இவர் ஹிஜ்ரி 293 ல் ஜுர்ஜான் நகரில் பிறந்தார். ஜுர்ஜான் என்பது இன்றைய ஈரான் நாட்டில் உள்ள ஒரு பிரபலமான நகரமாகும். இது ஈரானின் வடக்கு பகுதியில் உள்ளது. இதை பார்சி மொழியில் கர்கான் என்று அழைக்கப்படுகின்றது. இந்நகரம் உமவிய்யா மன்னர் சுலைமான் இப்னு அப்துல் மலிக் அவர்களின் காலத்தில் இஸ்லாமிய ஆட்சிக்கு கீழ் வந்தது. இந்நகரில் இருந்து பிரபலமான பல அறிஞர்கள் உருவாகி இருக்கின்றார்கள்.

இவரைப் பற்றி இமாம் தஹபி தனது பிரபலமான நூல் சியரு அஃலாமின் நுபலாவில் இவ்வாறு தலைப்பிடுகிறார்கள்: இவர் இமாம் (-முன்னோடி, கல்வியில் தலைமைத் தகுதி பெற்றவர்), ஹாஃபிள் -ஹதீஸ்களை மனனம் செய்தவர், ஃபக்கீஹ் -மார்க்க சட்ட வல்லுநர், ஷைகுல் இஸ்லாம் -இஸ்லாமிய மார்க்கத்தில் மதிக்கத்தக்க பெரியவர், இமாம் ஷாஃபியி அவர்களின் ஃபிக்ஹ் சட்டங்களை பின்பற்றியவர், ஸஹீஹான ஹதீஸ்களை மட்டும் உள்ளடக்கிய அஸ்ஸஹீஹ் என்ற நூலை எழுதியவர், ஷாஃபியி மத்ஹபுடைய அறிஞர்களில் மிகப் பெரிய மூத்தவர்.

இவர் அக்காலத்தில் வாழ்ந்த அதிகமான அறிஞர்களிடம் கல்வி

கற்றுள்ளார். சிறுவயதிலிருந்து கல்வி கற்பதில் மிக ஆர்வமுள்ளவராக இருந்தார். வயோதிகத்திலும் கல்வியை தேடுவதில் ஆர்வமுள்ளவராக இருந்தார்.

பல பெரிய இமாம்களிடம் கல்வி கற்றுள்ளார். உதாரணமாக: இஸ்ஹாக் இப்னு ராஹவைஹி, இப்னு குஸைமா, பகவி, அபூ யஃலா, முஹம்மது இப்னு உஸ்மான் இப்னு அபீ ஷைபா ஹம்ஸா இப்னு முஹம்மது அல்காதிப்

இவர் பல பெரிய நூல்களை எழுதியுள்ளார். முஸ்னது உமர் என்று உமர் அவர்கள் மூலமாக அறிவிக்கப்படுகின்ற ஒரு நபிமொழி தொகுப்பை இரு பாகங்களில் தொகுத்துள்ளார். மேலும் இமாம் புகாரி அவர்கள் தொகுத்த ஸஹீஹ் நூலில் விடுபட்ட ஹதீஸ் தொகுப்பு (அல்முஸ்தக்ரஜ் அலஸ்ஸஹீஹ்) என்ற நூலை நான்கு பாகங்களில் எழுதினார். தான் கல்வி படித்த முன்னூறு ஆசிரியர்களின் அறிமுகத்தையும் பல பாகங்களில் எழுதியுள்ளார்.

இவரிடம் கல்விகற்ற பல பிரபலமான அறிஞர்கள் இருக்கின்றார்கள். உதாரணமாக: இமாம் ஹாகிம், அபூ பக்ர் அல்பர்காணி, ஹம்ஸா ஸஹ்மி, அபுல் ஹசன் முஹம்மது இப்னு அலி அத்தபரி, ஹாஃபிள் அபூ பக்ர் இப்னு முஹம்மது இப்னு இத்ரீஸ் அல்ஜுர்ஜானி.

இமாம் தாரகுத்னி அவர்கள், நான் இவரிடம் பயணம் சென்று கல்வி படிக்க வேண்டும் என்று பல முறை முயற்சி செய்தேன். ஆனால், அந்த வாய்ப்பு எனக்கு கிடைக்கவில்லை என்று கூறுகிறார்கள்.

இமாம் தஹபி கூறுகிறார்: இதற்கு காரணம் அவரிடம் இருந்த கல்வியாகும்.

சுயமாக ஆராய்ச்சி செய்கின்ற அளவிற்கு அவரிடம் கல்வி நிறைந்து இருந்தது. பிறரை பின்பற்ற வேண்டிய அவசியம் அவருக்கு இருக்கவில்லை என்று ஹசன் இப்னு அலி கூறியதாக ஹம்ஸா கூறுகிறார்.

இவரைப் பற்றி இமாம் ஹாகிம் இவ்வாறு கூறுகிறார்: இஸ்மாயீலி அவர் தனது காலத்தில் தனித்துவமிக்க ஒருவராக, முஹத்திஸ்கள், ஃபக்கீஹ்கள் என அறிஞர்களுக்கு ஆசிரியராக இருந்தார். தலைமைத்துவம், கண்ணியம், கொடைத் தன்மை என அனைத்திலும் மிகவும் உயர்வானவராக இருந்தார். எல்லா அறிஞர்களும் அவரைப் போற்றினார்கள்.

கல்வி சபைகளில் அறிஞர்களுக்கு முன்னிலையில் அவர் இருந்தால் அவர்தான் ஹதீஸ்களை வாசிப்பார். அவர் இருக்கும்போது வேறு யாரும் வாசிக்க முன்வர மாட்டார்கள்.

காழி அபுத் தய்யிப் கூறுகிறார்: அவரை சந்திப்பதற்காக நான் ஜுர்ஜான் நோக்கி பயணமானேன். ஆனால், நான் அவரை சந்திப்பதற்குள் மரணமாகி விட்டார்.

இவரைப் பற்றி இமாம் ஹாகிம் மேலும் இவ்வாறு கூறுகிறார்: நைஸாபூரில் ஹதீஸ்களின் முக்கிய தூண்களில் இவரும் ஒருவர். அந்தளவு அதிகமான எண்ணிக்கையில், அதிகமாக பயணம் செய்து ஹதீஸ்களை திரட்டி மனனம் செய்தார். இவர் அறிஞர்கள் மத்தியில் மிகவும் பிரபலமாக திகழ்ந்தார். இவர் ஹதீஸ் அறிவிப்பதில் உறுதியானவர், நம்பத்தகுந்தவர் ஆவார்.

இவரைப் பற்றி மேற்கூறப்பட்டவை இமாம் தஹபி பதிவு செய்ததாகும்.

இமாம் சுப்கி அவர்கள் இவரைப் பற்றி இப்படி கூறுகிறார்கள்: இவர் ஜுர்ஜான் நகர வாசிகளின் இமாம் ஆவார், ஹதீஸ் கலை, ஃபிக்ஹ் கலை என இரு துறைகளிலும் சந்தேகங்களை நீக்கி வைக்கின்ற முடிவு கூறுகின்ற அறிஞராக இவர் இருந்தார். பல நூல்களை எழுதியுள்ளார்கள். (தபகாத்து அஷ்ஷாஃபிய்யத்தில் குப்ரா)

இவரைப் பற்றி இமாம் இப்னு கசீர் கூறுவதாவது: இவர் ஃபக்கீஹ் -மார்க்க சட்ட வல்லுனர், இமாம் (-முன்னோடி, கல்வியில் தலைமைத் தகுதி பெற்றவர்), ஹதீஸ்களை மனனம் செய்தவர், ஃபிக்ஹ், ஹதீஸ் மற்றும் நூல்களை எழுதுவதில் ஷாஃபியி

மத்ஹபுடைய பெரிய அறிஞர்களில் முக்கியமான ஒருவர் ஆவார். பல அறிஞர்களிடமிருந்து ஹதீஸ்களை அறிவிக்கின்ற நம்பகமான அறிவிப்பாளர் ஆவார். (தபகாத்துஷ் ஷாஃபியிய்யீன்)

தனது வாழ்நாளை கல்வி கற்பதற்கும் கற்பிப்பதற்கும் செலவழித்த இந்த அறிஞர் ஹஜ்ரி 370ல் மரணமானார்கள்.

அல்லாஹ் இந்த அறிஞரையும் இஸ்லாமிய அறிஞர்கள் அனைவரையும் மன்னித்து அவர்களுக்கு உயர்ந்த சொர்க்கத்தை தருவானாக! அவர்களின் பாதையில் பயணிக்க எனக்கும் உங்களுக்கும் அருள் புரிவானாக! ஆமீன்.

-----------------

قال ابن قدامة أخبرنا الشريف أبو العباس مسعود بن عبد الواحد بن مطر الهاشمي قال أنبأ أبو الحسن على بن محمد الجرجاني أنبأ أبو القاسم حمزة بن يوسف السهمي أنبأ أبو بكر أحمد بن إبراهيم الإسماعيلي قال :

இப்னு குதாமா கூறுகிறார், எங்களுக்கு அஷ்ஷரீஃப் அபுல் அப்பாஸ் மஸ்வூது இப்னு அப்துல் வாஹித் இப்னு மதர் அல் ஹாஷிமி அறிவித்தார். அவர் கூறினார், எங்களுக்கு அபுல் ஹசன் அலி இப்னு முஹம்மது அல்ஜுர்ஜானி அறிவித்தார். அவர் கூறினார், எங்களுக்கு அபுல் காசிம் ஹம்ஸா இப்னு யூஸுஃப் அஸ்ஸஹ்மி அறிவித்தார். அவர் கூறினார்: எங்களுக்கு (இந்நூலின் ஆசிரியர்) அபூ பக்ர் அஹ்மது இப்னு இப்ராஹீம் அல்இஸ்மாயீலி அறிவித்தார்கள்.

(இந்நூலின் ஆசிரியர்) அபூ பக்ர் அஹ்மது இப்னு இப்ராஹீம் அல்இஸ்மாயீலி அவர்கள் கூறுகிறார்கள்:

أُصُولِ الْاِعْتِقَادِ عِنْدَ أَهْلِ الْـحَدِيْثِ

# ஹதீஸ் கலை அறிஞர்களிடம் கொள்கையின் அடிப்படைகள்

அறிந்து கொள்ளுங்கள்! அல்லாஹ் எங்களுக்கும் உங்களுக்கும் கருணை புரிவானாக! நிச்சயமாக உண்மையில் அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஆவாக இருக்கின்ற ஹதீஸ்கலை அறிஞர்களுடைய மத்ஹப் வழிமுறை என்னவென்றால், அல்லாஹ்வையும் அவனுடைய வானவர்களையும் அவனுடைய வேதங்களையும் அவனுடைய தூதர்களையும் மனதால் ஏற்று உறுதி மொழிவதாகும். மேலும், அல்லாஹு தஆலா உடைய வேதம் எதை கூறியதோ அதையும் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களின் புறத்தில் இருந்து வந்திருக்கக்கூடிய சரியான அறிவிப்புகளையும் ஏற்றுக் கொள்வதாகும். ரஸூலுல்லாஹ் அவர்கள் கொண்டு வந்ததை விட்டும் விலகி செல்ல இடமில்லை. இன்னும் அவர்கள் கூறியதை ரத்து செய்வதற்கும் (-மறுப்பதற்கும்) அறவே வழி இல்லை. ஏனெனில், வேதத்தையும் சுன்னாவையும் பின்பற்ற வேண்டும் என்றுதான் அவர்களுக்கு கட்டளை கொடுக்கப்பட்டுள்ளது; இவ்விரண்டில்தான் அவர்களுக்கு நேர்வழி உண்டு என்று உறுதிமானம் வழங்கப்பட்டுள்ளது; அவர்களது நபி மிக நேரான பாதையின் பக்கம் வழிகாட்டுவார்கள் என்று அவர்களுக்கு சாட்சி கூறப்பட்டுள்ளது; நபியவர்களுக்கு மாறுசெய்தால் குழப்பமும் வலிமிக்க வேதனையும் உண்டு என்று அவர்கள் எச்சரிக்கப்பட்டு இருக்கின்றார்கள்.

## اَلْقَوْلُ فِي الْأَسْمَاءِ وَالصِّفَاتِ

## அல்லாஹ்வின் பெயர்கள் மற்றும் பண்புகளில் அவர்கள் கூறுவதாவது

அவர்கள் நம்பிக்கை கொள்வதாவது: நிச்சயமாக அல்லாஹு தஆலா அவனுடைய அழகிய பெயர்களைக் கொண்டு அழைக்கப்படுவான்; இன்னும் அவனும் அவனுடைய நபி ﷺ அவர்களும் அவனை எந்த தன்மைகளைக் கொண்டு குறிப்பிட்டார்களோ, வர்ணித்தார்களோ அந்த அனைத்து தன்மைகளைக் கொண்டும் அவன் வர்ணிக்கப்படுவான். அவன் ஆதமை தனது கரத்தால் படைத்தான்; அவனது இரு கரங்களும் விரிந்தே உள்ளன; அவன் நாடிய விதத்தில் அவன் செலவு செய்கிறான் (-வாரி வழங்குகின்றான்); இன்னும் நிச்சயமாக அவன் அர்ஷுக்கு மேல் உயர்ந்து விட்டான்; இதை நாம் விவரிக்க முடியாது. ஏனெனில், நிச்சயமாக அல்லாஹ் தான் அர்ஷுக்கு மேல் உயர்ந்து விட்டேன் என்று கூறி முடித்துவிட்டான். அவன் உயர்ந்திருப்பது எப்படி என்பதை அவன் கூறவில்லை.

## ذِكْرُ بَعْضِ خَصَائِصِ الرُّبُوبِيَّةِ

## ருபூபிய்யா உடைய விஷேச தன்மைகளில் சிலவற்றை கூறுவது

மேலும் அவர்கள் நம்பிக்கை கொள்வதாவது:

நிச்சயமாக அவன் தனது படைப்புகள் அனைத்திற்கும் உரிமையாளன் ஆவான். அவன்தான் அவர்களை உருவாக்கினான். தான் படைத்த படைப்புகளில் எதன் பக்கமும் அவனுக்கு எவ்வித தேவையுமில்லை. அவன் அவர்களை படைத்தே ஆகவேண்டும் என்று எந்த விஷயமும் அவனை தூண்டவில்லை. (-நிரப்பந்திக்கவில்லை.) என்றாலும் நிச்சயமாக அவன் தான் விரும்பியதை செய்து முடிப்பவன் ஆவான்; அவன் விரும்புகின்றபடி அவன் ஆட்சி செய்கின்றான், அதிகாரம் செலுத்துகின்றான், தீப்பளிக்கின்றான், அவன் செய்வதைப்

பற்றி அவனிடம் யாரும் கேள்வி கேட்க முடியாது. படைப்புகள்தான் அவர்கள் செய்பவற்றைப் பற்றி விசாரிக்கப்படுவார்கள். கேள்வி கேட்கப்படுவார்கள்.

## إِثْبَاتُ أَسْمَاءِ اللهِ الْـحُسْنٰى وَصِفَاتِهِ الْعُلا

## அல்லாஹ்வின் அழகிய பெயர்களையும் அவனது உயர்ந்த பண்புகளையும் உறுதிப்படுத்துவது

மேலும் அவர்கள் நம்பிக்கை கொள்வதாவது:

நிச்சயமாக அவன் அவனுடைய (அழகிய) பெயர்களைக் கொண்டு அழைக்கப்படுவான்; இன்னும் அவன் தன்னை எந்த தன்மைகளைக் கொண்டு குறிப்பிட்டானோ, வர்ணித்தானோ அந்த அனைத்து தன்மைகளைக் கொண்டும் அவன் வர்ணிக்கப்படுவான். மேலும் அவனை நபி ﷺ அவர்கள் எந்த தன்மைகளைக் கொண்டு குறிப்பிட்டார்களோ, வர்ணித்தார்களோ அந்த அனைத்து தன்மைகளைக் கொண்டும் அவன் வர்ணிக்கப்படுவான். பூமியில் இன்னும் வானத்தில் உள்ள எதுவும் அவனை பலவீனப்படுத்திவிட முடியாது. அவனுடைய பெயர்களிலும் தன்மைகளிலும் எவ்விதமான நிறைவின்மையைக் கொண்டோ அல்லது எவ்விதமான குறையைக் கொண்டோ அல்லது அவனுடைய உள்ளமையில் ஊறுபாடு (சேதம், பாதிப்பு) ஏற்படுவதைக் கொண்டோ அவனை வர்ணிக்க முடியாது. கண்ணியத்திற்கும் கம்பீரத்திற்கும் உரிய அவன் அனைத்தையும் விட்டும் அந்தஸ்தால் மிக மிக உயர்ந்தவன்.

## إِثْبَاتُ صِفَةِ الْيَدَيْنِ

## இரு கரங்கள் என்ற தன்மையை உறுதிப்படுத்துவது

அவன் ஆதம் அவர்களை தனது கரத்தால் படைத்தான். அவனது இரு கரங்களும் விரிந்தே உள்ளன. அவன் விரும்பியபடி வாரி வழங்குகின்றான். அவனது கரங்கள் எப்படி இருக்கும் என்று நம்பிக்கை கொள்ளக் கூடாது, ஏனெனில், அல்லாஹ்வுடைய வேதம்

அது விஷயத்தில் எப்படி இருக்கும் என்று பேசவில்லை.

அவன் விஷயத்தில் உறுப்புகள், அவையங்கள், நீளம், அகலம், தடிப்பம், மெல்லியம், இன்னும் இதுபோன்ற படைப்புகளில் இருக்கின்ற எதையும் நம்பிக்கை கொள்ளக் கூடாது. நிச்சயமாக அவன் அவனைப் போன்று எதுவும் இல்லை. கம்பீரத்திற்கும் கண்ணியத்திற்கும் உரிய நமது இறைவனின் முகம் மிக்க பாக்கியம் நிறைந்ததாகும்.

கண்ணியத்திற்கும் கம்பீரத்திற்கும் உரிய அல்லாஹ்வின் பெயர்கள் படைக்கப்பட்டவை என்று அவர்கள் கூறமாட்டார்கள், முஃதஸிலா, காரிஜிய்யா, மற்றும் மனோ இச்சையை பின்பற்றுவோரை சேர்ந்த பல பிரிவினர்கள் கூறுவதுபோன்று (-அல்லாஹ்வின் பெயர்கள் விஷயத்தில் அவை படைக்கப்பட்டவை என்று கூறமாட்டார்கள்).

## قَوْلُـهُمْ فِي صِفَةِ الْوَجْهِ وَالسَّمْعِ وَالْبَصَرِ وَالْعِلْمِ وَالْقُدْرَةِ وَالْكَلَامِ

## முகம், செவி, பார்வை, அறிதல், ஆற்றல், பேச்சு ஆகியவற்றில் அவர்களின் கூற்று

அவர்கள் உறுதியாக நம்புவதாவது: நிச்சயமாக அவனுக்கு வஜ்ஹ் -முகம், ஸம்வு -செவி கேட்கும் ஆற்றல், பஸர் -பார்க்கும் ஆற்றல், இல்ம் -அறிவது, குத்ரத் -வல்லமை, கலாம் -பேசுதல் ஆகிய தன்மைகள் உண்டு. முஃதஸிலாக்கள் மற்றும் அவர்கள் அல்லாத மற்ற வழிகெட்டவர்கள் கூறுவதைப் போன்று அல்லாமல் அல்லாஹு தஆலா கூறி இருப்பதைப் போன்று இந்த தன்மைகள் அல்லாஹ்விற்கு உண்டு என்று நம்புகின்றனர்.

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿وَيَبْقَى وَجْهُ رَبِّكَ﴾

உமது இறைவனின் திருமுகம் மட்டும் (அழியாது) நிலைத்திருக்கும். (அல்குர்ஆன் 55 : 27)

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿أَنْزَلَهُ بِعِلْمِهِ﴾

(உமது மேலான தகுதியை) அறிந்தே அதை (உம்மீது அவன்) இறக்கி வைத்தான் (அல்குர்ஆன் 4 : 166)

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿وَلَا يُحِيطُونَ بِشَيْءٍ مِنْ عِلْمِهِ﴾

அவனுக்குத் தெரிந்தவற்றிலிருந்து எதையும் (மற்றெவரும் தங்கள் அறிவால்) அறிந்துகொள்ள முடியாது. (அல்குர்ஆன் 2 : 255)

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿فَلِلَّهِ الْعِزَّةُ جَمِيعًا﴾

கண்ணியங்கள் அனைத்துமே அல்லாஹ்வுக்குச் சொந்தமானவை. (அல்குர்ஆன் 35 : 10)

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿وَالسَّمَاءَ بَنَيْنَاهَا بِأَيْدٍ﴾

(எவருடைய உதவியுமின்றி) நம் சக்தியைக் கொண்டே வானத்தை அமைத்தோம். (அல்குர்ஆன் 51 : 47)

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿أَوَلَمْ يَرَوْا أَنَّ اللَّهَ الَّذِي خَلَقَهُمْ هُوَ أَشَدُّ مِنْهُمْ قُوَّةً﴾

அவர்களைப் படைத்த அல்லாஹ் நிச்சயமாக அவர்களைவிட பலசாலி என்பதை அவர்கள் கவனித்திருக்க வேண்டாமா? (அல்குர்ஆன் 41 : 15)

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿إِنَّ اللّٰهَ هُوَ الرَّزَّاقُ ذُو الْقُوَّةِ الْمَتِينُ﴾

நிச்சயமாக அல்லாஹ்தான் அனைவருக்கும் உணவளிப்பவனும், அசைக்க முடியாத பலசாலியுமாவான். (அல்குர்ஆன் 51 : 58)

இன்னும் உயர்ந்தோனாகிய அவன் இல்ம், குவ்வத், குத்ரத், ஸம்வு, பஸர், கலாம் - அறிவு, ஆற்றல், வலிமை, செவியுறுதல், பார்த்தல், பேசுதல் ஆகிய தன்மைகளை உடையவன் ஆவான்.

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿وَلِتُصْنَعَ عَلَى عَيْنِي﴾

நீர் என் கண் பார்வையில் வளர்க்கப்படுவதற்காக...

(அல்குர்ஆன் 20 : 39)

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿وَاصْنَعِ الْفُلْكَ بِأَعْيُنِنَا وَوَحْيِنَا﴾

நாம் அறிவிக்குமாறு நம் கண்முன்பாகவே ஒரு கப்பலை நீர் செய்வீராக. (அல்குர்ஆன் 11 : 37)

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿حَتّٰى يَسْمَعَ كَلَامَ اللّٰهِ﴾

அல்லாஹ்வுடைய வசனங்களை அவன் செவியுறும்வரை

(அல்குர்ஆன் 9 : 6)

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿وَكَلَّمَ اللّٰهُ مُوسَى تَكْلِيمًا﴾

மூஸாவு(க்கு வஹ்யி அறிவித்தது)டன் அல்லாஹ் பேசியும் இருக்கிறான். (அல்குர்ஆன் 4 : 164)

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿إِنَّمَا أَمْرُهُ إِذَا أَرَادَ شَيْئًا أَنْ يَقُولَ لَهُ كُنْ فَيَكُونُ﴾

அவன் ஒரு பொருளை(ப் படைக்க) கருதினால் அதை ‘ஆகுக!’ எனக் கூறுவதுதான் (தாமதம்). உடன் அது ஆகிவிடுகிறது. (அல்குர்ஆன் 36 : 82)

## إِثْبَاتُ الْـمَشِيْئَةِ

## அல்லாஹ்விற்கு நாட்டம் உண்டு என்று உறுதிப்படுத்துவது

முஸ்லிம்கள் எல்லோரும் கூறுவதைப் போன்றுதான் அவர்கள் கூறுகிறார்கள்: அல்லாஹ் எதை நாடினானோ அது நடந்தது. அவன் நாடாதது நடக்காது.

இவ்வாறுதான் அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

﴿وَمَا تَشَاءُونَ إِلَّا أَنْ يَشَاءَ اللّٰهُ﴾

எனினும், அல்லாஹ் நாடினால் தவிர நீங்கள் (எதையும்) விரும்ப முடியாது. (அல்குர்ஆன் 76 : 30)

## عِلْمُ اللّٰهِ

## அல்லாஹ்வின் அறிவு

இன்னும் அவர்கள் கூறுவதாவது:

அல்லாஹ்வின் அறிவைவிட்டும் தப்பிப்பதற்கு யாருக்கும் எந்த வழியும் இல்லை. இன்னும் அல்லாஹ்வின் நாட்டத்தை யாருடைய நாட்டமும் செயலும் தோற்கடிக்க முடியாது. அல்லாஹ்வின் அறிவை யாராலும் மாற்ற முடியாது. நிச்சயமாக அவன்தான் நன்கறிந்தவன். அவனுக்கு அறியாமை இல்லை. அவன் மறக்க மாட்டான். அவன்தான் சர்வ வல்லமையும் உடையவன். அவனை யாரும் தோற்கடிக்க முடியாது.

## اَلْقُرْآنُ كَلَامُ اللّٰهِ

## அல்குர்ஆன் அல்லாஹ்வின் பேச்சாகும்

இன்னும் அவர்கள் கூறுவதாவது: அல்குர்ஆன் அல்லாஹ் உடைய பேச்சாகும். அது படைக்கப்பட்டதல்ல. அதை ஓதுகின்ற காரி எப்படி திரும்ப திரும்ப ஓதினாலும் அதுவும் அதன் வார்த்தைகளும் படைக்கப்படாதவை ஆகும். அது நெஞ்சங்களில் மனனம் செய்யப்பட்டுள்ளது, நாவுகளால் ஓதப்படுகின்றது, ஏடுகளில் எழுதப்பட்டுள்ளது. அது படைக்கப்படாத ஒன்றுதான். யார், நான் உச்சரிக்கின்ற குர்ஆன் படைக்கப்பட்டது என்று குர்ஆனை மனதில் நினைத்துக்கொண்டு கூறுவாரோ அவர் குர்ஆன் படைக்கப்பட்டது என்று நேரடியாக கூறியவர்தான்.

## أَفْعَالُ الْعِبَادِ مَخْلُوقَةٌ لِلّٰهِ

## அடியார்களின் செயல்கள் அல்லாஹ்வினால் படைக்கப்பட்டவை ஆகும்

இன்னும் அவர்கள் கூறுவதாவது: நிச்சயமாக யதார்த்தத்தில் அல்லாஹ்வைத் தவிர வேறு படைப்பாளன் வேறு யாரும் அறவே இல்லை. அடியார்களுடைய செயல்கள் எல்லாம் அல்லாஹ்வினால் படைக்கப்படுபவைதான். இன்னும் நிச்சயமாக அல்லாஹ் தான் விரும்பியவரை நேர்வழி செலுத்துகின்றான். தான் நாடியவரை அவன் வழிகெடுக்கின்றான். அல்லாஹ் யாரை வழிகெடுத்தானோ அவன்

தனுக்கு எவ்வித ஆதாரத்தையும் காரணத்தையும் கூறமுடியாது. அல்லாஹ் இதை இவ்வாறு கூறுகின்றான்:

﴿قُلْ فَلِلَّهِ الْحُجَّةُ الْبَالِغَةُ فَلَوْ شَاءَ لَهَدَاكُمْ أَجْمَعِينَ﴾

(நபியே!) கூறுவீராக: "(மறுக்க முடியாத) முழுமையான ஆதாரம் அல்லாஹ்வுடையதே! (அவர்களுடைய ஆதாரம் முற்றிலும் தவறானது.) அவன் நாடியிருந்தால் உங்கள் அனைவரையும் நேரான வழியில் செலுத்தியிருப்பான்." (அல்குர்ஆன் 6 : 149)

இன்னும் அல்லாஹ் கூறுகின்றான்:

﴿كَمَا بَدَأَكُمْ تَعُودُونَ﴾

அவன் உங்களை (இல்லாமையில் இருந்து உலகத்தில்) ஆரம்பமாக படைத்ததுபோல் (நீங்கள் இறந்த பின்னர் மறுமை நாளில் மீண்டும் உயிர்ப்பிக்கப்பட்டு அவனிடமே) மீள்வீர்கள். (அல்குர்ஆன் 7 : 29)

இன்னும் அல்லாஹ் கூறுகின்றான்:

﴿فَرِيقًا هَدَى وَفَرِيقًا حَقَّ عَلَيْهِمُ الضَّلَالَةُ﴾

(உங்களில்) சிலரை அவன் நேரான வழியில் செலுத்தினான். மற்றோர் மீது வழிகேடே விதிக்கப்பட்டது. (அல்குர்ஆன் 7: 30)

இன்னும் அல்லாஹ் கூறுகின்றான்:

﴿وَلَقَدْ ذَرَأْنَا لِجَهَنَّمَ كَثِيرًا مِنَ الْجِنِّ وَالْإِنْسِ﴾

நிச்சயமாக மனிதர்களிலும், ஜின்களிலும் பலரை நரகத்திற்காகவே நாம் படைத்திருக்கிறோம். (அல்குர்ஆன் 7 : 179)

இன்னும் அல்லாஹ் கூறுகின்றான்:

﴿مَا أَصَابَ مِنْ مُصِيبَةٍ فِي الْأَرْضِ وَلَا فِي أَنْفُسِكُمْ
إِلَّا فِي كِتَابٍ مِنْ قَبْلِ أَنْ نَبْرَأَهَا﴾

(பொதுவாக) பூமியிலோ அல்லது (குறிப்பாக) உங்களுக்கோ ஏற்படக்கூடிய எந்தச் சிரமமும், (நஷ்டமும்) அது ஏற்படுவதற்கு முன்னதாகவே (லவ்ஹுல் மஹ்ஃபூள் என்னும்) பதிவுப் புத்தகத்தில் பதிவு செய்யப்படாமல் இல்லை. (அல்குர்ஆன் 57 : 22)

**نَبْرَأَهَا** நப்ரஅஹா என்றால் நக்லுகஹா -அவற்றை நாம் படிப்பதற்கு முன்னர் என்று பொருளாகும். அதாவது பரஅ மற்றும் கலக இரண்டும் ஒரே பொருளாகும். இன்னும் சொர்க்க வாசிகள் கூறுவார்கள் என்று அல்லாஹ் கூறுகின்றான்:

﴿أَنْ لَوْ يَشَاءُ اللّٰهُ لَهَدَى النَّاسَ جَمِيعًا﴾

ஆகவே, அல்லாஹ் நாடினால் மனிதர்கள் அனைவரையுமே நேரான வழியில் நடத்தி விடுவான். (அல்குர்ஆன் 13 : 31)

இன்னும் அல்லாஹ் கூறுகின்றான்:

﴿وَلَوْ شَاءَ رَبُّكَ لَجَعَلَ النَّاسَ أُمَّةً وَاحِدَةً وَلَا يَزَالُونَ مُخْتَلِفِينَ ○
إِلَّا مَنْ رَحِمَ رَبُّكَ﴾

உமது இறைவன் நாடியிருந்தால் மனிதர்கள் அனைவரையும் ஒரே வகுப்பினராக ஆக்கியிருப்பான். (அவ்வாறு நாடவில்லை.) அவர்கள் தங்களுக்குள் மாறுபட்டுக் கொண்டேயிருப்பார்கள். அவர்களில் உமது இறைவன் அருள் புரிந்தவர்களைத் தவிர.

(அல்குர்ஆன் 11 : 118,119)

## اَلْـخَيْرُ وَالشَّرُّ بِقَضَاءُ اللّٰهِ

## நன்மையும் தீமையும் அல்லாஹ்வின் விதியின்படியே!

இன்னும் அவர்கள கூறுவதாவது: நிச்சயமாக நன்மையும் தீமையும் (நாம்) விரும்பியதும் (நாம்) விரும்பாததும் அல்லாஹ்வின் புறத்திலிருந்து அவன் திட்டமிட்டு நடத்தியபடிதான் நடந்தது, நடக்கும். மனிதர்கள் தங்களுக்குதாமே எந்தவித தீங்கையோ அல்லது பலனையோ செய்துகொள்வதற்கு உரிமைபெற மாட்டார்கள், அல்லாஹ் நாடியதைத் தவிர. இன்னும், நிச்சயமாக அவர்கள் அல்லாஹ்வின் பக்கம் ஒவ்வொரு நேரத்திலும் தேவை உள்ளவர்களாகவே இருப்பார்கள், அவனை விட்டும் அவர்கள் ஒருபோதும் தேவையற்றுவிட முடியாது.

## اَلنُّزُولُ إِلَى السَّمَاءِ الدُّنْيَا

## கீழ் வானத்திற்கு இறங்குதல்

இன்னும் அவர்கள் நம்பிக்கை கொள்வதாவது:

நிச்சயமாக அல்லாஹ் கீழ் வானத்திற்கு, முதல் வானத்திற்கு இறங்கி வருகிறான். இது பற்றி ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடமிருந்து ஸஹீஹான ஹதீஸ் வந்துள்ளது. ஆனால், அவன் இறங்குதல் எப்படி இருக்கும் என்று தன்மையை விவரிக்கக் கூடாது.

## رُؤْيَةُ الْـمُؤْمِنِيْنَ رَبَّهُمْ فِي الْآخِرَةِ

## முஃமின்கள் தங்கள் ரப்பை மறுமையில் பார்ப்பது

இன்னும் அவர்கள் நம்பிக்கை கொள்வதாவது:

கண்ணியத்திற்கும் கம்பீரத்திற்கும் உரிய அல்லாஹ்வை பயந்து வாழ்ந்த அடியார்கள் அவனை மறுமை நாளில் பார்ப்பது சாத்தியமான ஒன்றுதான். ஆனால், உலகத்தில் அவனைப் பார்க்க முடியாது. இன்னும் அல்லாஹ் யாருக்கு தன்னைப் பார்ப்பதை அவர்களுக்கு

தான் கொடுக்கும் கூலியாக ஆக்கி இருக்கின்றானோ அவர்கள் கண்டிப்பாக அவனை பார்ப்பார்கள்.

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿وُجُوهٌ يَوْمَئِذٍ نَاضِرَةٌ ○ إِلَى رَبِّهَا نَاظِرَةٌ ○﴾

அந்நாளில் சில(ருடைய) முகங்கள் மிக்க ஒளிவுடன் மகிழ்ச்சியுடையவையாக இருக்கும். (அவை) தங்கள் இறைவனை நோக்கிய வண்ணமாக இருக்கும். (அல்குர்ஆன் 75 : 22, 23)

இன்னும் காஃபிர்கள் (நிராகரிப்பாளர்கள்) விஷயத்தில் அல்லாஹ் கூறுகின்றான்:

﴿كَلَّا إِنَّهُمْ عَنْ رَبِّهِمْ يَوْمَئِذٍ لَمَحْجُوبُونَ﴾

அவ்வாறல்ல. (விசாரணைக்காகக் கொண்டு வரப்படும்) அந்நாளில் நிச்சயமாக இவர்கள் தங்கள் இறைவனை விட்டும் தடுக்கப்பட்டு விடுவார்கள். (அல்குர்ஆன் 83 : 15)

முஃமின்கள் எல்லோரும், காஃபிர்கள் எல்லோரும் அவனை பார்க்க மாட்டார்கள் என்று இருந்தால் அவர்கள் அனைவருமே அவனைவிட்டும் தடுக்கப்பட்டவர்களாகவே இருந்திருப்பார்கள். ஆனால், காஃபிர்கள்தான் அல்லாஹ்வை விட்டும் தடுக்கப்படுவார்கள் என்று அல்லாஹ் கூறுகின்றான். அல்லாஹ்வை முஃமின்கள் பார்ப்பார்கள் என்று கூறும்போது நாம் அவனுக்கு உடலையோ அல்லது ஓர் எல்லையையோ நம்பிக்கை கொள்ளவில்லை. என்றாலும் கண்ணியத்திற்கும் கம்பீரத்திற்கும் உரிய அவனை அவன் நாடிய விதத்தில் அவர்கள் அவனைப் பார்ப்பார்கள்.

## حَقِيْقَةُ الْإِيْمَانِ

### ஈமானின் யதார்த்தம் - உண்மைத் தன்மை

இன்னும் அவர்கள் கூறுவதாவது:

நிச்சயமாக ஈமான் என்பது சொல், செயல், அறிதல் ஆகும். நன்மைகளைக் கொண்டு அது அதிகரிக்கும். பாவத்தைக் கொண்டு அது குறையும். யாருடைய வணக்க வழிபாடுகள் அதிகரிக்கின்றதோ அவர்கள் ஈமானில் அதிகமானவர்களாக இருப்பார்கள், வணக்க வழிபாட்டில் தம்மைவிட குறைவாக இருப்பவர்களை பார்க்கிலும்.

## قَوْلُـهُمْ فِي مُرْتَكِبِ الْكَبِيْرَةِ

## பெரும்பாவம் செய்பவர் விஷயத்தில் அவர்களின் கூற்று

இன்னும் அவர்கள் கூறுவதாவது:

அஹ்லுத் தவ்ஹீத் -அல்லாஹ்வை ஒருவனை மட்டும் வணங்கக் கூடியவர்கள் இன்னும் முஸ்லிம்கள் ஏற்றுக்கொண்ட கிப்லாவை நோக்கி தொழுகின்றவர்களில ஒவ்வொருவரும் ஒரு பாவத்தை அல்லது பல பாவங்களை செய்துவிட்டாலும், அவை சிறு பாவங்களாக இருந்தாலும் சரி, அல்லது பெரும் பாவங்களாக இருந்தாலும் சரி, அவர்கள் பாவம் செய்ததால் காஃபிர்களாக ஆகிவிட மாட்டார்கள். ஆனால் நிபந்தனை என்னவென்றால், அவர்கள் அல்லாஹ்வை ஒருவனை மட்டும் வணங்குவதில் நிலைத்திருக்க வேண்டும். இன்னும், அல்லாஹ் கட்டாயமாக்கியதையும் அல்லாஹ் அங்கீகரித்ததையும் ஒப்புக்கொண்ட நிலையில் இருக்க வேண்டும். இன்னும் இத்தகைய மக்களுக்காக நாம் அல்லாஹ்வின் மன்னிப்பை ஆதரவு வைக்கின்றோம்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

﴿وَيَغْفِرُ مَا دُونَ ذَلِكَ لِمَنْ يَشَاءُ﴾

இதைத் தவிர (மற்ற) எதையும் தான் நாடியவர்களுக்கு மன்னிப்பான். (அல்குர்ஆன் 4 : 48)

## حُكْمُ تَارِكِ الصَّلَاةِ عَمْدًا

## வேண்டுமென்றே தொழுகையை விடுபவரின் சட்டம்

தொழுகையை அதன் நேரம் முடிகின்றவரை வேண்டுமென்ற எவ்வித சரியான காரணமும் இன்றி விடக்கூடியவர்கள் அவர்கள் (-ஹதீஸ்களை அறிஞர்கள்) மாறுபட்ட கருத்தை கொண்டிருக்கின்றார்கள். அவர்களின் ஒரு கூட்டத்தினர் இத்தகைய மனிதனை காஃபிர் என்று கூறுகின்றார்கள். ஏனெனில், நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

بَيْنَ الرَّجُلِ وَبَيْنَ الشِّرْكِ وَالْكُفْرِ تَرْكُ الصَّلَاةِ

அடியானுக்கும் ஷிர்க் -இணைவத்தலுக்கும், குஃப்ர் -நிராகரிப்புக்கும் இடையில் தொழுகையை விடுவதில்தான் இருக்கின்றது.[1]

மேலும், நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

الْعَهْدُ الَّذِي بَيْنَنَا وَبَيْنَهُمُ الصَّلَاةُ فَمَنْ تَرَكَهَا فَقَدْ كَفَرَ

நமக்கு மத்தியிலும் அவர்களுக்கு மத்தியிலும் இருக்கின்ற உடன்படிக்கை தொழுகைதான். யார் அதை (-தொழுகையை) விடுவாரோ அவர் திட்டமாக காஃபிர் ஆகிவிட்டார்.[2]

ஹதீஸ் கலை அறிஞர்களில் ஒரு கூட்டத்தினர் மேற்கூறப்பட்ட நபிமொழிகளுக்கு வேறு விளக்கம் கூறுகிறார்கள். அதாவது இந்த நபிமொழிகளில் தர்க் -விடுவது என்று வந்துள்ள பதத்திற்கு வெறும் விடுவது என்பது பொருள் அல்ல. மாறாக மறுத்த நிலையில் விடுவதாகும். இதற்கு உதாரணம் யூஸுஃப் அலைஹிஸ்ஸலாம் கூறியதை அல்லாஹ் குர்ஆனில் கூறுவதாகும்.

---

1. நூல்: முஸ்லிம், எண்: 82
2. நூல்: இப்னு மாஜா, எண்: 1079

﴿إِنِّي تَرَكْتُ مِلَّةَ قَوْمٍ لَا يُؤْمِنُونَ بِاللَّهِ وَهُمْ بِالْآخِرَةِ هُمْ كَافِرُونَ﴾

அல்லாஹ்வை நம்பிக்கைக் கொள்ளாது மறுமையை நிராகரிக்கின்ற மக்களுடைய மார்க்கத்தை நிச்சயமாக நான் விட்டுவிட்டேன்.

(அல்குர்ஆன் 12 : 37)

இந்த வசனத்தில் நான் விட்டுவிட்டேன் என்பதற்கு பொருள், அதை மறுத்து அதைவிட்டு விலகிவிட்டேன் என்பதாகும். ஆகவே, வெறும் விடுவது குஃப்ராக ஆகிவிடாது. தொழுகையை ஏற்க மறுத்து விடுவதுதான் குஃப்ர் ஆகும்.

## أَقْوَالُ أَهْلِ الْعِلْمِ فِي الْفَرْقِ بَيْنَ الْإِسْلَامِ وَالْإِيْمَانِ

## இஸ்லாமுக்கும் ஈமானுக்கும் இடையில் உள்ள வேறுபாட்டில் கல்விமான்களின் கூற்றுகள்

அவர்களில் சிலர் கூறுவதாவது:

இஸ்லாம் இன்னும் ஈமான் இரண்டும் ஒன்று சேர்த்து கூறப்பட்டால் அப்போது நிச்சயமாக ஈமான் என்பது சொல்லும் செயலும் ஆகும். இஸ்லாம் என்பது அடியான் மீது கட்டாய கடமையாக ஆக்கப்பட்டதை செய்வதாகும்.

இன்னும் சிலர் கூறுவதாவது:

முஸ்லிம்கள், முஃமின்கள் என்று இணைத்து தனித்தனியாக ஓர் இடத்தில் கூறப்பட்டால் இவற்றில் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியான பொருள்தான் கூறப்படும். இரண்டு பெயர்களில் ஒன்று மட்டும் ஓர் இடத்தில் கூறப்பட்டால் அவர்கள் எல்லோரையும் அந்த பெயர் பொதுவாக எடுத்துக் கொள்ளும்.

அறிஞர்களில் அதிகமானவர்கள் இவ்வாறு கூறுகின்றனர்: இஸ்லாம் இன்னும் ஈமான் இரண்டும் ஒன்றுதான்.

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿وَمَنْ يَبْتَغِ غَيْرَ الْإِسْلَامِ دِينًا فَلَنْ يُقْبَلَ مِنْهُ﴾

இஸ்லாமையன்றி (வேறொரு) மார்க்கத்தை எவரேனும் விரும்பினால் நிச்சயமாக அவரிடமிருந்து (அது) அங்கீகரிக்கவே படமாட்டாது.

(அல்குர்ஆன் 3 : 85)

ஆகவே, இஸ்லாம் அல்லாத வேறு ஒன்றாக ஈமான் இருந்திருந்தால் அது அவரிடமிருந்து ஏற்றுகொள்ளப்பட்டிருக்காது.

மேலும் அல்லாஹ் கூறுகின்றான்:

﴿فَأَخْرَجْنَا مَنْ كَانَ فِيهَا مِنَ الْمُؤْمِنِينَ ○
فَمَا وَجَدْنَا فِيهَا غَيْرَ بَيْتٍ مِنَ الْمُسْلِمِينَ ○﴾

ஆகவே, (அவர்கள் அழிவதற்கு முன்னதாகவே அவ்வூரில் இருந்த) நம்பிக்கை கொண்டவர்களை அதிலிருந்து நாம் வெளிப்படுத்தி விட்டோம். எனினும், அதில் (லூத்துடைய) ஒரு வீட்டாரைத் தவிர, நம்பிக்கை கொண்ட ஒருவரையும் நாங்கள் காணவில்லை.

(அல்குர்ஆன் 51 : 35, 36)

இன்னும் சில அறிஞர்கள் கூறுவதாவது:

இஸ்லாம் என்பதன் பொருள், அல்லாஹ்விற்கு முன் சரணடைந்து விடுவது, அவனுக்கு பணிவது, இன்னும் அல்லாஹ்வுடைய சட்டம் என்று எதையெல்லாம் அவர் நம்பிக்கைக் கொண்டிருக்கின்றாரோ அவனுடைய அந்த சட்டங்களுக்கு கீழ்ப்படிவது ஆகும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿قَالَتِ الْأَعْرَابُ آمَنَّا قُلْ لَمْ تُؤْمِنُوا وَلَكِنْ قُولُوا أَسْلَمْنَا
وَلَمَّا يَدْخُلِ الْإِيمَانُ فِي قُلُوبِكُمْ﴾

(நபியே!) நாட்டுப்புறத்து அரபிகளில் பலர், தாங்களும் நம்பிக்கையாளர்கள் எனக் கூறுகின்றனர். (அவர்களை நோக்கி) நீர் கூறுவீராக: "நீங்கள் உங்களை நம்பிக்கையாளர்கள் எனக் கூறாதீர்கள். ஏனென்றால், நம்பிக்கை உங்கள் உள்ளங்களில் நுழையவே இல்லை. ஆயினும், (வெளிப்படையாக) வழிபடுபவர்கள் என்று (உங்களை) நீங்கள் கூறிக் கொள்ளுங்கள். (அல்குர்ஆன் 49 : 14)

இன்னும் அல்லாஹ் கூறுகின்றான்:

﴿يَمُنُّونَ عَلَيْكَ أَنْ أَسْلَمُوا قُلْ لَا تَمُنُّوا عَلَيَّ إِسْلَامَكُمْ
بَلِ اللَّهُ يَمُنُّ عَلَيْكُمْ أَنْ هَدَاكُمْ لِلْإِيمَانِ﴾

(நபியே!) அவர்கள் இஸ்லாமில் சேர்ந்ததன் காரணமாக உம்மீது உபகாரம் செய்து விட்டதாக கருதுகின்றனர். (நபியே!) கூறுவீராக: "நீங்கள் இஸ்லாமில் சேர்ந்ததனால் என்மீது உபகாரம் செய்து விட்டதாக எண்ணாதீர்கள். மாறாக, நீங்கள் நம்பிக்கையாளர்களாக ஆகும்படி செய்ததன் காரணமாக அல்லாஹ்தான் உங்கள் மீது உபகாரம் செய்திருக்கிறான் (அல்குர்ஆன் 49 : 17)

இந்த இறுதி வசனத்தை ஈமானும் இஸ்லாமும் ஒன்று என கூறுவோரும் ஆதாரமாக எடுக்கிறார்கள்.

## اَلشَّفَاعَةُ وَالْـحَوْضُ وَالْـمَعَادُ وَالْـحِسَابُ

## சிபாரிசு, நீர் தடாகம், மறுமை, விசாரணை

இன்னும் அவர்கள் (-ஹதீஸ்கலை இமாம்கள்) கூறுவதாவது: நிச்சயமாக அல்லாஹ் நாளை மறுமையில் சிபாரிசு செய்கின்ற (நல்ல)வர்களின் சிபாரிசினால் அல்லாஹ்வை மட்டும் வணங்க கூடியவர்களில் இருந்து யார் நரகத்தில் சென்று விட்டார்களோ அவர்களை நரகத்தில் இருந்து வெளியாக்குவான். இன்னும் சிபாரிசு உண்டு என்பது உண்மைதான். நீர் தடாகம் உண்டு

என்பது உண்மைதான். மறுமையில் எழுப்பப்படுதல் உண்மைதான். விசாரணை உண்டு என்பது உண்மைதான்.

## تَرْكُ الشَّهَادَةِ لِأَحَدٍ مِنَ الْـمُوَحِّدِيْنَ بِالْـجَنَّةِ أَوِ النَّارِ

## அல்லாஹ்வை வணங்கக்கூடியவர்களில் யார் ஒருவருக்கும் சொர்க்கம் அல்லது நரகம் நிச்சயம் என்று சாட்சி கூறுவதை விடுவது

இஸ்லாமிய மார்க்கத்தை சேர்ந்த யார் ஒருவரையும் பார்த்து நிச்சயமாக அவர் சொர்க்கவாசிகளில் இருவர் அல்லது நரகவாசிகளில் ஒருவர் என்று உறுதிப்பட அவர்கள் கூறமாட்டார்கள். ஏனெனில், இதுபற்றிய அறிவு அவர்களுக்கு மறைந்த ஒன்றாகும். அவருக்கு மரணம் எந்த நிலையில் வந்தது என்பதை அவர்கள் அறிய மாட்டார்கள். அவர் இஸ்லாமிய மார்க்கத்தில் இருக்கின்ற நிலையில் இறந்தாரா அல்லது குஃப்ரில் இறந்தாரா என்று அவர்களால் அறியமுடியாது. என்றாலும் அவர்கள் கூறுவதாவது: நிச்சயமாக யார்தான் முஸ்லிமாக இருக்கின்ற நிலையில் பெரும் பாவங்களை விட்டும் அனாச்சாரங்களை விட்டும் குற்றங்களை விட்டும் விலகியவராக மரணிப்பாரோ அவர் சொர்க்க வாசிகளில் இருப்பார்.

ஏனெனில், அல்லாஹ் கூறுகின்றான்:

﴿إِنَّ الَّذِينَ آمَنُوا وَعَمِلُوا الصَّالِحَاتِ أُولَئِكَ هُمْ خَيْرُ الْبَرِيَّةِ ○ جَزَاؤُهُمْ عِنْدَ رَبِّهِمْ جَنَّاتُ عَدْنٍ﴾

ஆயினும், (இந்த நபியின் வரவை எதிர்பார்த்திருந்தவர்களில்) எவர்கள் (அவரை) நம்பிக்கை கொண்டு நற்செயல்கள் செய்கிறார்களோ அவர்களே, நிச்சயமாக படைப்புகளில் மிகச் சிறந்தவர்கள். அவர்களுடைய கூலி அவர்களின் இறைவனிடத்தில் உள்ள 'அத்ன்' என்னும் நிலையான சொர்க்கங்களாகும். (அல்குர்ஆன் 98 : 7, 8)

இவ்வசனத்தில் நிச்சயமாக நம்பிக்கைக் கொண்டு நல்லமல்களை

செய்தவர்கள் என்று அல்லாஹ் கூறுகின்றான். இங்கே பாவங்களைப் பற்றி அல்லாஹ் கூறவில்லை. ஆகவேதான் பாவங்களைவிட்டு விலகிய நிலையில் ஒரு முஸ்லிம் இறந்தால் அவர் சொர்க்க வாசிகளில் இருப்பார் என்று கூறுகிறோம்.

நபி ﷺ அவர்கள் யாரைப் பற்றி குறிப்பிட்டு அவர் சொர்க்கவாசி என்று கூறியது ஸஹீஹான ஹதீஸ்கள் வாயிலாக அவர்களுக்கு கிடைத்ததோ அவர்களும் அவருக்கு சொர்க்கத்தைக் கொண்டு சாட்சி கூறுவார்கள். இது விஷயத்தில் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களைத்தான் பின்பற்ற வேண்டும், அவர்களின் கூற்றை உண்மைப்படுத்த வேண்டும்.

## عَذَابُ الْقَبْرِ

## மண்ணறையின் தண்டனை

இன்னும் அவர்கள் கூறுவதாவது:

மண்ணறையின் தண்டனை உண்மையாகும். அதற்கு யார் தகுதியாக இருக்கின்றார்களோ அவர்களை அல்லாஹ் நாடினால் மண்ணறையில் தண்டிப்பான். அவன் நாடினால் அவர்களை மன்னிப்பான்.

ஏனெனில் அல்லாஹ் கூறுகின்றான்:

﴿النَّارُ يُعْرَضُونَ عَلَيْهَا غُدُوًّا وَعَشِيًّا وَيَوْمَ تَقُومُ السَّاعَةُ أَدْخِلُوا آلَ فِرْعَوْنَ أَشَدَّ الْعَذَابِ﴾

காலையிலும் மாலையிலும் அவர்கள் நரக நெருப்பின் முன் கொண்டு போகப்படுகின்றனர். மறுமை நாளிலோ, ஃபிர்அவ்னுடைய மக்களை மிகக் கடினமான வேதனையில் புகுத்துங்கள் எனக் கூறப்படும்.

(அல்குர்ஆன் 40 : 46)

இந்த உலகம் இருக்கின்ற வரை காலையிலும் மாலையிலும் மட்டும்

முழு நாளும் இல்லாமல் அவர்களுக்கு தண்டனை உண்டு. மறுமை ஏற்பட்டுவிட்டால் அவர்களுக்கு அங்கு கடுமையான தண்டனை உண்டு என்று கூறுகின்றான். உலகில் தண்டனை சில சமயம் குறைக்கப்பட்டது போன்று மறுமையில் தண்டனை குறைக்கப்படாது.

மேலும் அல்லாஹ் கூறுகின்றான்:

﴿وَمَنْ أَعْرَضَ عَنْ ذِكْرِي فَإِنَّ لَهُ مَعِيشَةً ضَنْكًا﴾

எவன் என் நல்லுபதேசங்களைப் புறக்கணிக்கிறானோ அவனுடைய வாழ்க்கை நிச்சயமாக நெருக்கடியானதாகவே இருக்கும்.

(அல்குர்ஆன் 20 : 124)

இந்த தண்டனை உலகம் அழியும் முன்பாக கொடுக்கப்படக் கூடியது ஆகும்.

இந்த வசனத்தை தொடர்ந்து அடுத்து அல்லாஹ் கூறுகின்றான்:

﴿وَنَحْشُرُهُ يَوْمَ الْقِيَامَةِ أَعْمَى﴾

மறுமை நாளிலோ நாம் அவனைக் குருடனாகவே எழுப்புவோம்.

(அல்குர்ஆன் 20 : 124)

இந்த வசனத்திலிருந்து நெருக்கடியான வாழ்க்கை என்பது மறுமை வாழ்வுக்கு முன்னால் உள்ளது என்பதை அறிய முடிகிறது. அதாவது, அல்லாஹ்வின் நினைவை புறக்கணித்தவர்களுக்கு நெருக்கடியான வாழ்க்கை கிடைக்கும் என்று அல்லாஹ் கூறுகின்றான். ஆனால், இன்று அல்லாஹ்வின் நினைவை புறக்கணித்து வாழ்கின்ற யூதர்கள், கிறிஸ்தவர்கள், இன்னும் முஷ்ரிக்குகள் செல்வ செழிப்பிலும் வசதியான ஆடம்பரமான வாழ்க்கையிலும் வாழ்கின்றார்கள். ஆகவே, அல்லாஹ் நெருக்கடியான வாழ்க்கை என்று கூறுவது இந்த உலகத்தில் அல்ல. மாறாக அது மறுமைக்கு முன் மண்ணறையில் உள்ள வாழ்க்கை என்பதை அறிய முடிகிறது. மறுமையில்

அவர்களை அவன் குருடர்களாக எழுப்பிய பின் இன்னும் அதிகம் தண்டனை கொடுப்பான்.

## سُؤَالُ مُنْكَرٍ وَنَكِيرٍ

## முன்கர், நகீர் உடைய கேள்வி

அல்லாஹு தஆலா குர்ஆனில் கூறி இருப்பதுடன் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் வாயிலாக ஸஹீஹான ஹதீஸ்களில் வந்திருக்கின்ற அடிப்படையில் முன்கர், நகீர் என்ற இரு வானவர்கள் மண்ணறையில் கேள்வி கேட்பார்கள் என்பதை அவர்கள் ஈமான் கொள்கின்றார்கள்.

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿يُثَبِّتُ اللَّهُ الَّذِينَ آمَنُوا بِالْقَوْلِ الثَّابِتِ فِي الْحَيَاةِ الدُّنْيَا وَفِي الْآخِرَةِ وَيُضِلُّ اللَّهُ الظَّالِمِينَ وَيَفْعَلُ اللَّهُ مَا يَشَاءُ﴾

மெய்யாகவே எவர்கள் நம்பிக்கை கொள்கிறார்களோ அவர்களை மறுமையிலும், இம்மையிலும் ('கலிமா தையிப்' என்னும்) உறுதிமிக்க இந்த வார்த்தையைக் கொண்டு அல்லாஹ் உறுதிப்படுத்துகிறான். அநியாயக்காரர்களை (அவர்களுடைய பாவத்தின் காரணமாக) தவறான வழியில் அல்லாஹ் விட்டுவிடுகிறான்; அல்லாஹ் நாடியதைச் செய்கிறான். (அதைத் தடை செய்ய எவராலும் முடியாது.)

(அல்குர்ஆன் 14 : 27)

இதற்குரிய விளக்கத்தை நபி ﷺ அவர்கள் கூறி இருக்கின்றார்கள்.

## تَرْكُ الْـخُصُومَاتِ وَالْـمِرَاءِ فِي الدِّينِ

## மார்க்கத்தில் தர்க்கம் செய்வது, சண்டை சச்சரவுகள் செய்வதை விடுவது.

குர்ஆனிலும் மற்றும் அது அல்லாத மார்க்க விஷயங்களிலும்

தர்க்கம் செய்வதையும் சண்டை சச்சரவுகள் செய்வதையும் விட்டு விடவேண்டும் என்று அவர்கள் கருதுகிறார்கள்.

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿مَا يُجَادِلُ فِي آيَاتِ اللهِ إِلَّا الَّذِينَ كَفَرُوا﴾

(நபியே!) நிராகரிப்பவர்களைத் தவிர (மற்றெவரும்) அல்லாஹ்வுடைய வசனங்களைப் பற்றி (வீணாகத்) தர்க்கிக்க மாட்டார்கள்.

(அல்குர்ஆன் 40 : 4)

அதாவது, இவர்கள் அல்லாஹ்வின் வேதத்தை பொய்பிப்பதற்காக அதில் தர்க்கம் செய்கிறார்கள். அல்லாஹ் மிக அறிந்தவன்

## خِلَافَةُ الْـخُلَفَاءِ الرَّاشِدِينَ

## நேர்வழி பெற்ற கலீஃபாக்கள் உடைய ஆட்சி

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுக்குப் பிறகு அபூ பக்ர் ؓ அவர்களின் ஆட்சியை அவர்கள் உறுதியாக ஏற்றுக் கொள்கிறார்கள். நபியவர்களின் மரணத்திற்குப் பிறகு அபூ பக்ர் ؓ அவர்களைத்தான் நபித்தோழர்கள் கலீஃபாவாக தேர்ந்தெடுத்தார்கள். பிறகு உமர் ؓ அவர்களின் ஆட்சியை உறுதி செய்கிறார்கள். அபூ பக்ர் ؓ அவர்கள் தங்களுக்கு பிறகு, உமர் ؓ கலீஃபாவாக இருக்க வேண்டும் என்று முடிவு செய்தார்கள். பிறகு உஸ்மான் ؓ அவர்களின் ஆட்சியை உறுதி செய்கிறார்கள். முஸ்லிம்களின் காரியத்தை நிர்வகிக்க உமர் ؓ அவர்கள் ஏற்படுத்திய ஆலோசனை சபை உஸ்மான் ؓ அவர்களை கலீஃபாவாக தேர்ந்தெடுத்தார்கள். பிறகு அலி இப்னு அபீ தாலிப் ؓ அவர்களின் ஆட்சியை உறுதி செய்கிறார்கள். பத்ரு போரில் கலந்து கொண்ட அம்மார் இப்னு யாசிர் ؓ, ஸஹ்ல் இப்னு ஹுனைஃப் ؓ மற்றும் பல நபித்தோழர்கள் ஒன்று சேர்ந்து அலி ؓ அவர்களுக்கு பைஅத் செய்துகொடுத்து கலீபாவாக தேர்ந்தெடுத்தார்கள். இன்னும் அலி ؓ அவர்கள் அதற்கு தகுதி

உள்ளவர்களாகவும் இருந்தார்கள். முந்திய இஸ்லாமை ஏற்றவர்களில் அவர்களும் அடங்குவார்கள். அவர்களுக்கு என்று தனிப் பெரும் சிறப்புகள் நபிமொழிகளில் வந்துள்ளன.

## اَلْـمُفَاضَلَةُ بَيْنَ الصَّحَابَةِ

## நபித்தோழர்களுக்கு மத்தியில் சிறப்பில் ஏற்றத்தாழ்வு

ஸஹாபாக்கள் மத்தியில் சிறப்புகளில் ஏற்றத்தாழ்வு உள்ளது என்று அவர்கள் கூறுகிறார்கள்: ஏனெனில், அல்லாஹ் கூறுகின்றான்:

﴿لَقَدْ رَضِيَ اللّٰهُ عَنِ الْمُؤْمِنِينَ إِذْ يُبَايِعُونَكَ تَحْتَ الشَّجَرَةِ﴾

அந்த மரத்தினடியில் உம்மிடம் (கைகொடுத்து) வாக்குறுதி செய்த நம்பிக்கையாளர்களைப் பற்றி நிச்சயமாக அல்லாஹ் திருப்தியடைந்தான். (அல்குர்ஆன் 48 : 18)

இன்னும் அல்லாஹ் கூறுகின்றான்:

﴿وَالسَّابِقُونَ الْأَوَّلُونَ مِنَ الْمُهَاجِرِينَ وَالْأَنْصَارِ
وَالَّذِينَ اتَّبَعُوهُمْ بِإِحْسَانٍ رَضِيَ اللّٰهُ عَنْهُمْ﴾

முஹாஜிர்களிலும் அன்ஸார்களிலும் எவர்கள் (இஸ்லாமில்) முதலாவதாக முந்திக் (கொண்டு நம்பிக்கை) கொண்டார்களோ அவர்களையும், நற்செயல்களில் (மெய்யாகவே) இவர்களைப் பின்பற்றியவர்களையும் பற்றி அல்லாஹ் திருப்தியடைகிறான்.
(அல்குர்ஆன் 9 : 100)

யாருக்கு அல்லாஹ் தனது பொருத்தம் உண்டு என்று உறுதியாக கூறி விட்டானோ அவர்களிடமிருந்து அதற்குப் பின்னர் அல்லாஹ்வை அதிருப்தி படுத்தக்கூடிய காரியம் எதுவும் நிகழவில்லை.

ஆனால், ஸஹாபாக்களுக்கு பின்னால் வருகின்ற மக்களுக்களில்

யாருக்கும் அல்லாஹ் தன்னுடைய பொருத்தம் உண்டு என்பதை அவர்கள் இஹ்சான் -நன்மைகள் செய்ய வேண்டும் என்ற நிபந்தனையுடந்தான் கூறுகின்றான். ஆனால், பின்வருபவர்களில் யார் இஹ்சான் -நன்மைகளை செய்யவில்லையோ அவர்களுக்கு அல்லாஹ்வின் பொருத்தத்தில் பங்கு ஏதுமில்லை.

## قَوْلُـهُمْ فِيْمَن يَبْغَضُ الصَّحَابَةَ ﷺ

## நபித்தோழர்களை வெறுப்பவர்கள் விஷயத்தில் அவர்களின் கூற்று

அல்லாஹ்விற்கு ஸஹாபாக்கள் நெருக்கமாக இருப்பதும் அவனிடம் அவர்கள் மதிப்புள்ளவர்களாக இருப்பதும் யாருக்கும் ஆத்திரமூட்டினால் அவருடைய நிலை மிகுந்த பயத்திற்குரியதாகும். அதைவிட வேறு பயம் எதுவும் இருக்க முடியாது.

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿مُحَمَّدٌ رَسُولُ اللهِ وَالَّذِينَ مَعَهُ أَشِدَّاءُ عَلَى الْكُفَّارِ رُحَمَاءُ بَيْنَهُمْ تَرَاهُمْ رُكَّعًا سُجَّدًا يَبْتَغُونَ فَضْلًا مِنَ اللهِ وَرِضْوَانًا سِيمَاهُمْ فِي وُجُوهِهِمْ مِنْ أَثَرِ السُّجُودِ ذَٰلِكَ مَثَلُهُمْ فِي التَّوْرَاةِ وَمَثَلُهُمْ فِي الْإِنْجِيلِ كَزَرْعٍ أَخْرَجَ شَطْأَهُ فَآزَرَهُ فَاسْتَغْلَظَ فَاسْتَوَى عَلَى سُوقِهِ يُعْجِبُ الزُّرَّاعَ لِيَغِيظَ بِهِمُ الْكُفَّارَ وَعَدَ اللهُ الَّذِينَ آمَنُوا وَعَمِلُوا الصَّالِحَاتِ مِنْهُمْ مَغْفِرَةً وَأَجْرًا عَظِيمًا﴾

முஹம்மது (ஸல்) அல்லாஹ்வுடைய திருத்தூதராவார்கள். (அவரும்) அவருடன் இருப்பவர்களும் நிராகரிப்பவர்கள் விஷயத்தில் கண்டிப்பானவர்களாகவும், தங்களுக்குள் மிக்க அன்புடையவர்களாகவும் இருப்பார்கள். குனிந்து சிரம் பணிந்து

வணங்குபவர்களாக அவர்களை நீர் காண்பீர். அல்லாஹ்வின் அருளையும், அவனுடைய திருப்பொருத்தத்தையும் (எந்த நேரமும்) விரும்பியவர்களாக இருப்பார்கள். அவர்களுடைய அடையாளமாவது: அவர்களுடைய முகங்களில் சிரம் பணி(ந்து வணங்கு)வதின் அடையாளம் இருக்கும். இதுவே தவ்றாத் (என்னும் வேதத்)தில் உள்ள அவர்களின் வர்ணிப்பு. இன்ஜீலில் அவர்களுக்குள்ள உதாரணமாவது: ஒரு பயிரை ஒத்திருக்கிறது. அப்பயிர் (பசுமையாகி, வளர்ந்து) உறுதிப்படுகிறது. பின்னர், அது தடித்துக் கனமாகிறது. பின்னர், விவசாயிகளுக்கு ஆச்சரியம் கொடுக்கும் விதத்தில் (வளர்ந்து,) அது தன் தண்டின் மீது நிமிர்ந்து நிற்கிறது. இவர்களைக் கொண்டு நிராகரிப்பவர்களுக்குக் கோபமூட்டும் பொருட்டு (அந்த நம்பிக்கையாளர்களை படிப்படியாக அபிவிருத்திக்குக் கொண்டு வருகிறான்). அவர்களில் எவர்கள் நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் செய்கிறார்களோ, அவர்களுக்கு அல்லாஹ் மன்னிப்பையும், மகத்தான கூலியையும் வாக்களித்திருக்கிறான்.

(அல்குர்ஆன் 48 : 29)

நபித்தோழர்கள் காஃபிர்களுக்குத்தான் ஆத்திரமாக இருப்பார்கள் என்று அல்லாஹ் கூறுகின்றான்.

இன்னும் நபித்தோழர்களை அல்லாஹ்தான் இந்த பூமியில் கலீஃபாக்களாக - ஆட்சியாளர்களாக ஆக்கி இருக்கின்றான் என்று அவர்கள் கூறுகின்றார்கள்.

ஏனெனில், அல்லாஹ் இவ்வாறு கூறுகின்றான்:

﴿وَعَدَ اللّٰهُ الَّذِينَ آمَنُوا مِنْكُمْ وَعَمِلُوا الصَّالِحَاتِ﴾

(மனிதர்களே!) உங்களில் எவரேனும் மெய்யாகவே நம்பிக்கை கொண்டு நற்செயல்களையும் செய்து வந்தால்...

(அல்குர்ஆன் 24 : 55)

இந்த வசனத்தில் உள்ள மின்கும் என்ற பதம் யாரைக் குறிக்கிறது

என்றால் இப்போது யார் நபியின் மார்க்கத்தில் பிறந்து நபியோடு இருந்தார்களோ அவர்களை குறிக்கின்றது. அதாவது உங்களில் யார் முன்கூட்டியே ஈமானை ஏற்று நல்லமல்களை செய்து வந்தார்களோ அவர்களை அல்லாஹ் இந்த பூமிக்கு கலீஃபாவாக ஆக்குவான். அதைத்தான் அல்லாஹ் கூறுகின்றான்:

﴿لَيَسْتَخْلِفَنَّهُمْ فِي الْأَرْضِ كَمَا اسْتَخْلَفَ الَّذِينَ مِنْ قَبْلِهِمْ وَلَيُمَكِّنَنَّ لَهُمْ دِينَهُمُ الَّذِي ارْتَضَى لَهُمْ وَلَيُبَدِّلَنَّهُمْ مِنْ بَعْدِ خَوْفِهِمْ أَمْنًا يَعْبُدُونَنِي لَا يُشْرِكُونَ بِي شَيْئًا﴾

அவர்களுக்கு முன்னர் சென்றவர்களை(ப் பூமிக்கு) அதிபதிகளாக்கியது போன்றே இவர்களையும் நிச்சயமாகப் பூமிக்கு அதிபதியாக்கி வைப்பதாகவும், அவன் இவர்களுக்கு விரும்பிய மார்க்கத்தில் இவர்களை உறுதியாக்கி வைப்பதாகவும், அமைதியையும் பாதுகாப்பையும் கொண்டு இவர்களுடைய பயத்தை மாற்றி விடுவதாகவும் நிச்சயமாக அல்லாஹ் வாக்களித்திருக்கிறான். (அன்றி) அவர்கள் தன்னையே வணங்கும்படியாகவும், எதையும் தனக்கு இணையாக்கக் கூடாது என்றும் அவன் கட்டளையிட்டிருக்கிறான்.

(அல்குர்ஆன் 24 : 55)

அல்லாஹ் இந்த மார்க்கத்தை அபூ பக்ர், உமர், உஸ்மான் ﵃ ஆகியோரைக் கொண்டு இந்த பூமியில் பலப்படுத்தினான். அல்லாஹ் அவர்களுக்கு வாக்களித்தது போன்று அவர்கள் எதிரிகளின் பயமற்றவர்களாக இருந்தார்கள். அவர்கள்தான் எதிரிகள் மீது போர் தொடுத்தார்கள். அவர்கள் மீது எந்த எதிரியாலும் போர் தொடுக்க முடியவில்லை. அவர்கள்தான் எதிரிகளை அச்சுறுத்தினார்கள். எந்த எதிரியாலும் அவர்களை அச்சுறுத்த முடியவில்லை.

சிலர் நபி ﷺ அவர்களின் காலத்தில் நபியுடன் போருக்கு செல்லாமல் பின் தங்கிவிட்டார்கள். அந்த போருக்கு அவர்கள் சென்றிருக்க வேண்டும் என்று அல்லாஹ் ஆர்வமூட்டி இருந்தான். இருந்தும்

அவர்கள் செல்லாமல் பின்தங்கி விட்டார்கள். அல்லாஹ் அவர்களை குறித்து பின்வருகின்ற வசனத்தில் இவ்வாறு கூறுகின்றான்:

﴿فَإِنْ رَجَعَكَ اللَّهُ إِلَى طَائِفَةٍ مِنْهُمْ فَاسْتَأْذَنُوكَ لِلْخُرُوجِ فَقُلْ لَنْ تَخْرُجُوا مَعِيَ أَبَدًا وَلَنْ تُقَاتِلُوا مَعِيَ عَدُوًّا إِنَّكُمْ رَضِيتُمْ بِالْقُعُودِ أَوَّلَ مَرَّةٍ فَاقْعُدُوا مَعَ الْخَالِفِينَ﴾

(நபியே!) நீர் (போரில் வெற்றி பெற்றவராக) அவர்களில் ஒரு கூட்டத்தாரிடம் திரும்ப வரும்படி அல்லாஹ் செய்து (உங்கள் வெற்றியையும், நீங்கள் கொண்டு வந்த பொருள்களையும் அவர்கள் கண்டு, உங்களுடன் மற்றொரு போருக்குப்) புறப்பட உங்களிடம் அனுமதி கோரினால் (அவர்களை நோக்கி) “நீங்கள் (போருக்கு) ஒருக்காலத்திலும் என்னுடன் புறப்படவேண்டாம். என்னுடன் சேர்ந்து எந்த எதிரியிடமும் நீங்கள் போர்புரிய வேண்டாம். ஏனென்றால், நிச்சயமாக நீங்கள் முதல் முறையில் (வீட்டில்) தங்கிவிடுவதையே விரும்பினீர்கள். ஆதலால், (இப்பொழுதும்) நீங்கள் (வீட்டில்) தங்கிவிடுபவர்களுடன் இருந்து விடுங்கள்” என்று (நபியே! நீர்) கூறுவீராக. (அல்குர்ஆன் 9 : 83)

நபி ﷺ அவர்கள் போரிலிருந்து திரும்ப வந்தபோது அவர்கள் அடுத்தபோரில் நாங்களும் உங்களுடன் கலந்து கொள்வோம் என்று கூறி போருக்கு செல்ல அவர்கள் அனுமதி கேட்டு வந்தார்கள். ஆனால், நபி ﷺ அவர்கள் அனுமதி வழங்கவில்லை. அது குறித்து அல்லாஹ் கூறுகின்றான்:

﴿سَيَقُولُ الْمُخَلَّفُونَ إِذَا انْطَلَقْتُمْ إِلَى مَغَانِمَ لِتَأْخُذُوهَا ذَرُونَا نَتَّبِعْكُمْ يُرِيدُونَ أَنْ يُبَدِّلُوا كَلَامَ اللَّهِ قُلْ لَنْ تَتَّبِعُونَا كَذَلِكُمْ قَالَ اللَّهُ مِنْ قَبْلُ فَسَيَقُولُونَ بَلْ تَحْسُدُونَنَا بَلْ كَانُوا لَا يَفْقَهُونَ إِلَّا قَلِيلًا﴾

(நபியே! முன்னர் போருக்கு உம்முடன் வராது) பின் தங்கிவிட்டவர்கள், போரில் கிடைத்த பொருள்களை எடுத்துக்கொள்ள நீங்கள் செல்லும் சமயத்தில், (உங்களை நோக்கி) “நாங்களும் உங்களைப் பின்பற்றிவர எங்களை (அனுமதித்து) விடுங்கள்” என்று கூறுவார்கள். இவர்கள் அல்லாஹ்வுடைய கட்டளையை மாற்றிவிடவே கருதுகிறார்கள். ஆகவே, நீர் அவர்களை நோக்கி “நீங்கள் எங்களைப் பின்பற்றி வர வேண்டாம். இதற்கு முன்னரே அல்லாஹ் இவ்வாறு கூறிவிட்டான்” என்றும் கூறுவீராக. அதற்கவர்கள், (“அல்லாஹ் ஒன்றும் கூறவில்லை;”) மாறாக, நீங்கள்தான் நம்மீது பொறாமைகொண்டு (இவ்வாறு) கூறுகிறீர்கள் என்று கூறுவார்கள். மாறாக, அவர்களில் சிலரைத் தவிர (மற்றெவரும் இதன் கருத்தை) உணர்ந்து கொள்ள மாட்டார்கள். (அல்குர்ஆன் 48 : 15)

மேலும், அவர்களுக்கு கூறினான்:

﴿قُلْ لِلْمُخَلَّفِينَ مِنَ الْأَعْرَابِ سَتُدْعَوْنَ إِلَى قَوْمٍ أُولِي بَأْسٍ شَدِيدٍ تُقَاتِلُونَهُمْ أَوْ يُسْلِمُونَ فَإِنْ تُطِيعُوا يُؤْتِكُمُ اللَّهُ أَجْرًا حَسَنًا وَإِنْ تَتَوَلَّوْا كَمَا تَوَلَّيْتُمْ مِنْ قَبْلُ يُعَذِّبْكُمْ عَذَابًا أَلِيمًا﴾

(நபியே!) பின்தங்கிய நாட்டுப்புறத்து அரபிகளை நோக்கி நீர் கூறுவீராக: “மிக பலசாலிகளான மக்களுடன் (போர்புரிய) அதிசீக்கிரத்தில் நீங்கள் அழைக்கப்படுவீர்கள். அவர்கள் முற்றிலும் கட்டுப்படும் வரை, நீங்கள் அவர்களுடன் போர்புரிய வேண்டியதிருக்கும். (இதில்) நீங்கள் (எனக்கு) கட்டுப்பட்டு நடப்பீர்களாயின், அல்லாஹ் உங்களுக்கு அழகான கூலியைக் கொடுப்பான். இதற்கு முன்னர் நீங்கள் (போர் செய்யாது) திரும்பிவிட்டபடி (அச்சமயம் போர் புரியாது) நீங்கள் திரும்பி விடுவீர்களாயின், அவன் உங்களை மிகக் கடினமாகத் துன்புறுத்தி வேதனை செய்வான்.”

(அல்குர்ஆன் 48 : 16)

இவர்கள் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களின் காலத்தில் உயிரோடு

இருந்தவர்கள். இவர்கள் போருக்கு செல்லாமல் பின்தங்கியதால் அவர்களை நோக்கி அல்லாஹ் இவ்வாறு கூறினான். அவர்களில் யார் அபூ பக்ர், உமர், மற்றும் உஸ்மான் ﷺ அவர்களின் காலத்திலும் உயிர் வாழ்ந்தார்களோ அவர்களுக்கு அல்லாஹ் கூறி இருந்தது என்னவென்றால் அவர்கள் இந்த கலீஃபாக்களுக்கு கீழ்ப்படிந்து போருக்கு சென்றால் அவர்களுக்கு அல்லாஹ் நற்கூலியை மறுமையில் தருவான். அப்படி அவர்கள் கலீஃபாக்களுக்கு கீழ்ப்படிந்து போருக்கு செல்லவில்லை என்றால் அவர்களுக்கு வேதனை மிக்க தண்டனை உண்டு என்று அல்லாஹ் எச்சரிக்கின்றான்.

அதாவது இந்த வசனம் நபி ﷺ அவர்களின் காலத்தில் இறக்கப்பட்டது. அப்போது அதில் கூறப்பட்டது என்னவெனில் இனி வரும் காலங்களில் போருக்கு அழைக்கும்போது அவர்கள் போருக்கு சென்றால் அவர்களை அல்லாஹ் மன்னித்து நற்கூலி வழங்குவான். அப்படி செல்லவில்லை என்றால் அவர்களுக்கு தண்டனை உண்டு. இதற்கு பின்னர் நபி ﷺ அவர்கள் மரணமடைந்து விட்டார்கள். போருக்கு செல்லாத அந்த மக்கள் உயிர் வாழ்ந்தார்கள். அவர்களை போருக்கு செல்ல அழைத்தது அபூ பக்ர், உமர், உஸ்மான் ﷺ ஆகிய கலீஃபாக்கள்.

ஆகவே, இந்த வசனம் நபிக்குப் பின்னர் வந்த ஆட்சியாளர்களை அங்கீகரிக்கிறது என்பது தெளிவாக புரியமுடிகிறது. ஆகவேதான் அந்த கலீஃபாக்களை ஏற்க வேண்டும் என்று கூறுகின்றோம். அவர்கள் விஷயத்தில் நமது உள்ளத்தில் எவ்விதமான குரோதத்தையும் அல்லாஹ் ஆக்காமல் இருப்பானாக! நபி ﷺ அவர்களுக்கு பின்னர் கலீபாவாக ஆன ஒருவருடைய ஆட்சி சரியானது என்று உறுதியாகி விட்டால் மற்ற நால்வருடைய ஆட்சியும் சரியானதுதான் என்பது உறுதியாகிவிடும்.

اَلْـجُمْعَةُ خَلْفَ كُلِّ إِمَامٍ مُسْلِمٍ بَرًّا كَانَ أَوْ فَاجِرًا

**முஸ்லிமாக இருக்கின்ற மன்னர் நல்லவராக இருந்தாலும் பாவியாக இருந்தாலும் அவருக்கு பின்னர் ஜுமுஆ**

## தொழுகையை நிறைவேற்ற வேண்டும்.

முஸ்லிமாக இருக்கின்ற மன்னர் நல்லவராக இருந்தாலும் பாவியாக இருந்தாலும் அவருக்கு பின்னர் ஜுமுஆ மற்றும் எல்லா தொழுகைகளையும் நிறைவேற்ற வேண்டும். ஏனெனில், நிச்சயமாக அல்லாஹ் ஜுமுஆவை கடமையாக்கினான். மிக மிக கட்டாயமாக அதை நிறைவேற்ற வேண்டும் என்று பொதுவாக அதை கூறினான். அதை நிறைவற்றி வைக்கின்றவர்களில் பாவிகளும், கெட்டவர்களும் இருப்பார்கள் என்பதை அல்லாஹ் அறிந்திருந்தும், ஜுமுஆவிற்கு அழைக்கப்பட்டால் நீங்கள் உடனே செல்லுங்கள் என்றுதான் அல்லாஹ் கூறி இருக்கின்றான். அழைப்பவர்கள் நல்லவர்களாக இருந்தால் மட்டும் நீங்கள் ஜுமுஆவிற்கு செல்லுங்கள் என்று அல்லாஹ் பிரித்து கூறவில்லை. ஆகவே, ஆட்சியாளர் எப்படி இருந்தாலும் அவருக்குப் பின்னர் தொழுகையை நிறைவேற்ற வேண்டும்.

اَلْـجِهَادُ مَعَ الْأَئِمَّةُ وَإِنْ كَانُوا جَوْرَةً

## மன்னர்களுடன் போருக்கு செல்ல வேண்டும், அவர்கள் அநியாயக்காரர்களாக இருந்தாலும் சரி!

மன்னர்கள் அநியாயக்காரர்களாக இருந்தாலும் அவர்கள் போருக்கு அழைத்தால் நாம் அவர்களுடன் சேர்ந்து போருக்கு புறப்பட்டு செல்ல வேண்டும் என்பதைத்தான் அவர்கள் (ஹதீஸ் கலை அறிஞர்கள்) கருதுகிறார்கள். மேலும் அவர்கள் நன்மையாக கருதுவதாவது: மன்னர்களுக்காக நாம் நன்மையை வேண்டியும் அவர்கள் சீர்திருந்த வேண்டியும், நீதத்தின் பக்கம் அவர்கள் திரும்ப வேண்டும் என்றும் அல்லாஹ்விடம் துஆ கேட்க வேண்டும். மேலும், அவர்களுக்கு எதிராக ஆயுதம் ஏந்துவது கூடாது. ஆட்சியில் குழப்பம் ஏற்பட்டு முஸ்லிம்களுக்குள் சண்டை மூளுமாயின் அதில் சண்டையிடக் கூடாது. நீதமான மன்னருக்கு எதிராக கிளர்ச்சி செய்து வரம்பு மீறக்கூடிய கூட்டத்திடம் சண்டை செய்ய வேண்டும். மன்னர்

நீதமானவர் என்பதற்கு அஹ்லுஸ் ஸுன்னா என்ன நிபந்தனைகளை வைத்திருக்கிறார்களோ அந்த நிபந்தனைகளின்படி மன்னர் இருக்கும்போது அவருக்கு ஆதரவாக இருக்க வேண்டும். அவரை எதிர்ப்பவர்களிடம் சண்டை செய்ய வேண்டும்.

دَارُ الْإِسْلَامِ

## தாருல் இஸ்லாம் - இஸ்லாமிய நாடு

இன்னும் அவர்கள் கருதுவதாவது:

முஸ்லிம்கள் வசிக்கக்கூடிய நாட்டில் அதானும் இகாமத்தும் வெளிப்படையாக கூறப்பட்டு மக்கள் நிம்மதியாக பாதுகாப்பு பெற்றவர்களாக இருந்து தொழுகையை நிறைவேற்ற முழு வசதி பெற்றவர்களாக இருந்தால் அந்த நாடு தாருல் இஸ்லாம் -இஸ்லாமிய நாடாகும். (மற்ற பாவங்கள் இருக்கின்ற காரணத்தால்) முஃதஸிலாக்கள் கூறுவது போல அதை தாருல் குஃப்ர் என்று கூறக்கூடாது.

أَعْمَالُ الْعِبَادِ لَا تُوجِبُ لَـهُمُ الْـجَنَّةِ إِلَّا بِفَضْلِ اللهِ

## அடியார்களின் நல்லமல்கள் அவர்களுக்கு சொர்க்கத்தை அல்லாஹ்வின் அருள் இன்றி கட்டாயமாக்கி விடாது!

மேலும், அவர்கள் கருதுவதாவது:

ஒருவர் எவ்வளவுதான் நல்லமல்களை செய்தாலும் அல்லாஹ்வின் அருளும் கருணையும் இல்லாமல் அவருக்கு சொர்க்கம் கிடைத்து விடாது. அல்லாஹ் தனது கருணையை தான் நாடியவருக்கு விஷேசமாக வழங்கி சிறப்பிக்கின்றான். அவர் நன்மையை செய்ததும் வணக்க வழிபாட்டில் ஈடுபட்டதும் அல்லாஹ்வின் அருளினால்தான். அல்லாஹ்தான் அவருக்கு தனது தெளிவான ஆதாரத்தை கொடுத்து வழிகாட்டினான். அதை புறக்கணிப்பதற்கு அவரிடம் எவ்விதமான

நியாயமான காரணமும் இருக்க முடியாது.

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿وَلَوْلَا فَضْلُ اللهِ عَلَيْكُمْ وَرَحْمَتُهُ مَا زَكَى مِنْكُمْ مِنْ أَحَدٍ أَبَدًا وَلَكِنَّ اللهَ يُزَكِّي مَنْ يَشَاءُ﴾

அல்லாஹ்வுடைய அருளும், கருணையும் உங்கள் மீது இல்லாதிருப்பின் உங்களில் ஒருவருமே எக்காலத்திலும் பரிசுத்தவானாக ஆகி இருக்க முடியாது. எனினும், அல்லாஹ், தான் நாடியவனைப் பரிசுத்தவானாக ஆக்குகிறான்.(அல்குர்ஆன் 24 : 21)

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿وَلَوْلَا فَضْلُ اللهِ عَلَيْكُمْ وَرَحْمَتُهُ لَاتَّبَعْتُمُ الشَّيْطَانَ إِلَّا قَلِيلًا﴾

அல்லாஹ்வுடைய அருளும், அவனுடைய கருணையும் உங்கள் மீது இல்லையென்றால் (உங்களில்) சிலரைத் தவிர நீங்கள் அனைவரும் ஷைத்தானையே பின்பற்றியிருப்பீர்கள். (அல்குர்ஆன் 4 : 83)

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿يَخْتَصُّ بِرَحْمَتِهِ مَنْ يَشَاءُ﴾

அல்லாஹ், தான் விரும்பியவர்களுக்குத் தன் கருணையை சொந்தமாக்கி விடுகிறான். (அல்குர்ஆன் 2 : 105)

## اَلرَّازِقُ اَللّٰهُ

## உணவளிப்பவன் அல்லாஹ்தான்

நிச்சயமாக படைக்கப்பட்ட ஒவ்வொரு உயிரினமும் உயிர் வாழ்வதற்கு தேவையான உணவை அல்லாஹ்தான் வழங்குகின்றான். தனது

படைப்புகளில் யாரை அல்லாஹ் உயிர் வாழவைக்கின்றானோ அவர்களுக்குள்ள உணவிற்கு அல்லாஹ்தான் பொறுப்பாளன். ஹலால் அல்லது ஹராம் எந்த வகையில் உணவு வந்தாலும் அது அல்லாஹ்வின் புறத்திலிருந்துதான். மேலும், அத்தியாவசிய வாழ்க்கைக்குப் போக மிதமுள்ள உபரியான வாழ்வாதாரமும் வாழ்க்கையின் அலங்கார தேவைகளையும் நிறைவேற்றி வைப்பவன் அல்லாஹ்தான்.

## اَللّٰهُ خَالِقَ الشَّيَاطِيْنَ وَوَسَاوِسَهُمْ

## அல்லாஹ்தான் ஷைத்தான்களையும் அவர்களின் ஊசலாட்டங்களையும் படைப்பவன்

இன்னும் அவர்கள் ஈமான் -நம்பிக்கை கொள்வதாவது:

நிச்சயமாக அல்லாஹு தஆலாதான் ஷைத்தான்களை படைத்தான். அவை மனிதர்களுக்கு ஊசலாட்டங்களை உண்டுபண்ணுகின்றன. அவை மனிதர்களை மயக்கி ஏமாற்றுகின்றன. மேலும் ஷைத்தான் மனிதர்களுக்கு பைத்தியம் பிடிக்க செய்து தடுமாற்றத்தையும் ஏற்படுத்துவான்.

## اَلسِّحْرُ وَالسَّحَرَةُ

## சூனியம் மற்றும் சூனியக்காரர்கள்

இன்னும் நிச்சயமாக இவ்வுலகத்தில் சூனியம் உண்டு. சூனியக்காரர்கள் இருக்கின்றார்கள். சூனியமும் அதை செய்வதும் செய்பவருக்கு இறை நிராகரிப்பை ஏற்படுத்திவிடும். ஒருவர் சூனியத்தை நம்பிக்கை கொண்டால், அல்லாஹ்வின் அனுமதி இன்றி அது நன்மை பயக்கும் அல்லது தீமை செய்யும் என்று நம்பினால் அவர் காஃபிர் ஆக ஆகிவிடுவார்.

## مُـجَانَبَةُ الْبِدْعَةِ

## அனாச்சாரங்களை விட்டு விலகி இருப்பது

இன்னும் அவர்கள் கருதுவதாவது:

அனாச்சாரங்கள், பாவங்கள், தற்பெருமை, கர்வம் கொள்வது, மமதை, மோசடி, தீமையை விரும்புவது, கோல் மூட்டுவது ஆகிய அனைத்தையும் விட்டு விலகி, தூரமாக இருக்க வேண்டும்.

இன்னும் அவர்கள் கருதுவதாவது:

பிறருக்கு தொந்தரவு செய்யக்கூடாது, புறம் பேசக்கூடாது. ஆனால், யார் வெளிப்படையாக பித்அதை செய்து, அதன் பக்கம் மக்களை அழைக்கிறாரோ அவரைப் பற்றி பகிரங்கப்படுத்துவது கூடும். அவரைப் பற்றி பேசுவது அவர்களிடம் புறம் பேசுவதாக ஆகாது.

## تَعَلُّمِ الْعِلْمِ

## கல்வி கற்க வேண்டும்.

இன்னும் அவர்கள் கருதுவதாவது:

கல்வியை அதற்குரிய சரியான ஆதாரங்களிலிருந்து தேடிச் சென்று கற்க வேண்டும். குர்ஆனையும் அதன் கல்விகளையும் அதன் விளக்க உரைகளையும் கற்பதில் தீவிரம் காட்ட வேண்டும். ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுடைய ஹதீஸ்களை கேட்டு மனப்பாடம் செய்வதிலும் அவற்றை ஒன்று திரட்டி வைப்பதிலும் அவற்றில் ஞானம் பெறுவதையும் அவற்றில் உள்ள மார்க்க சட்டங்களை கற்பதிலும் முனைப்பு காட்ட வேண்டும். ஸஹாபா உடைய கூற்றுகளையும் தேடி கற்க வேண்டும்.

## اَلْكَفُّ عَنِ الصَّحَابَةِ

### ஸஹாபா விஷயத்தில் தவறாக பேசுதல் கூடாது

ஸஹாபா -நபித்தோழர்கள் விஷயத்தில் தவறாக பேசுவதை விட்டும் தவிர்ந்து வாய்மூடி இருக்க வேண்டும். அவர்கள் மீது தகுதியற்றதை அசிங்கமானதை பேசுவதை விட்டும் விலகி இருக்க வேண்டும். ஸஹாபா மத்தியில் என்ன நடந்ததோ அதற்குரிய விளக்கத்தை அல்லாஹ்விடம் ஒப்படைத்து விட வேண்டும்.

## لُزُومُ الْـجَمَاعَةِ

### ஜமாஅத்தை விட்டு விலகாமல் இருக்க வேண்டும்

முஸ்லிம்களின் ஜமாஅத்தை விட்டு விலகாமல் இருக்க வேண்டும். உண்பது, குடிப்பது, உடுத்துவதில் ஹலாலை பேணி இருக்க வேண்டும். நன்மைகளையும் நல்லறங்களையும் செய்வதில் பாடுபட வேண்டும். நன்மையை ஏவி, தீமையை தடுக்க வேண்டும். அறியாதவர்கள் தரும் இடையூறுகளை புறக்கணித்து விட வேண்டும். அறியாத மக்களுக்கு கல்வியறிவு கொடுக்க வேண்டும். அவர்களுக்கு உண்மையை விளக்கி சொல்ல வேண்டும். உண்மையும் சத்தியமும் அவர்களுக்கு விளக்கி சொல்லப்பட்ட பின்னர் அவர்கள் தீமையை தொடர்ந்து செய்தால் அவர்களை கண்டிக்க வேண்டும், தண்டிக்க வேண்டும்.

## وُجُوبُ لُزُومِ مَذْهَبِ أَهْلِ الْـحَدِيْثِ اَلْفِرْقَةِ النَّاجِيَةِ

### ஈடேற்றம் பெற்ற கூட்டமாகிய ஹதீஸ் கலை அறிஞர்களின் வழிமுறையை பின்பற்றுவது கட்டாயம்

இதுதான் உண்மையான அசலான மார்க்கமாகும், வழிமுறையாகும். அதாவது ஹதீஸ்களை அறிஞர்களின் இமாம்கள் எதை கொள்கையாக ஏற்று இருக்கின்றார்களோ அதுதான் உண்மையான மார்க்கமாகும். அவர்களை எந்த ஒரு அனாச்சாரமும் அசிங்கப்படுத்தவில்லை.

(அவர்கள் எந்த ஒரு அனாச்சாரத்தையும் செய்து மார்க்கத்தில் அசிங்கப்படவில்லை.) அவர்களை எந்த ஒரு குழப்பமும் குழப்பிவிடவில்லை. (-அவர்கள் எந்த ஃபித்னா -குழப்பத்திலும் சிக்கவில்லை.) மார்க்கத்திற்கு எந்த கெடுதியையும் அவர்கள் மறைத்தும் செய்யவில்லை. மார்க்கத்தை விட்டும் ஒரு கணமும் அவர்கள் பிரிந்து விடவில்லை.

அறிந்து கொள்ளுங்கள்! நிச்சயமாக அல்லாஹ் தனது வேதத்தில் தனது மன்னிப்பையும் அன்பையும் யார் தனது ரஸூலை பின்பற்றுவார்களோ அவர்களுக்கு கட்டாயமாக்கி இருக்கின்றான். அவர்களைத்தான் ஈடேற்றம் பெற்ற பிரிவாகவும் நாம் பின்பற்ற தகுந்த கூட்டமாகவும் ஆக்கி இருக்கின்றான். யார் தான் அல்லாஹ்வை நேசிக்கின்றேன் என்று தாவா செய்கிறாரோ அவரை நோக்கி அல்லாஹ் கூறுகின்றான்:

﴿قُلْ إِنْ كُنْتُمْ تُحِبُّونَ اللّٰهَ فَاتَّبِعُونِي يُحْبِبْكُمُ اللّٰهُ وَيَغْفِرْ لَكُمْ ذُنُوبَكُمْ﴾

(நபியே! மனிதர்களை நோக்கி) கூறுவீராக: "நீங்கள் மெய்யாகவே அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள். உங்களை அல்லாஹ் நேசிப்பான். உங்கள் பாவங்களையும் அவன் மன்னித்து விடுவான். (அல்குர்ஆன் 3 : 31)

نَفَعَنَا اللّٰهُ وَإِيَّاكُمْ بِالْعِلْمِ وَعَصَمَنَا بِالتَّقْوَى مِنَ الزَّيْغِ وَالضَّلَالَةِ بِمَنِّهِ وَرَحْمَتِهِ.

கல்வியைக் கொண்டு அல்லாஹ் எங்களுக்கும் உங்களுக்கும் பலனளிப்பானாக! நம் அனைவரையும் தக்வா -இறையச்சத்தைக் கொண்டு வழிதவறுவதிலிருந்தும் வழிகெடுவதிலிருந்தும் தனது அருட்கொடையாலும் தனது கருணையாலும் பாதுகாப்பானாக!

----------------

# திறமைமிக்க மார்க்க அறிஞர்கள் தொகுத்த சட்ட நூல்கள்




எல்லோரும் அறிய வேண்டிய மார்க்க சட்டங்கள்.

சரியான ஆதாரங்கள்.

எளிய நடை.

இல்லங்கள், மஸ்ஜிகள் மற்றும் மத்ரஸாக்களில் இருக்கவேண்டிய தொகுப்பு.

அல்ஹம்து லில்லாஹ்!
படியுங்கள்! பரப்புங்கள்!!

BOOK SIZE: H 21.5 X W 15 CM | 70 GSM PAPER | 5 VOLUMES | 668 PAGES | 44 CHAPTERS

**DARUL HUDA**
QUALITY ISLAMIC BOOK PUBLISHER
# 211 (102), 1st Floor, Linghi Street, Mannady, Chennai-1.
Phone : +91-44-25247866, | darulhuda.chennai@gmail.com
Mobile : +91-98401 74121 | www.darulhuda.net

DH-TML 2063